ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள்

# கல்வி

ஆண்மை தரும்

கல்வியே

நமக்குத் தேவை





ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம்
கோயமுத்தூர் ஜில்லா

# கல்வி



ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள்
அருளியது

தி. சு. அவினாசிலிங்கம்
ஆங்கிலத்தில் தொகுத்துத்
தமிழாக்கியது



ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம்
கோயமுத்தூர் ஜில்லா

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | டிசம்பர் 1941 |
| இரண்டாம் பதிப்பு | : | மார்ச் 1944 |
| மூன்றும் பதிப்பு | : | மார்ச் 1952 |
| நான்காம் பதிப்பு | : | ஆகஸ்ட் 1959 |
| ஐந்தாம் பதிப்பு | : | ஜூலை 1970 |



விலை ரூ. 1.50

வெளியிடுவோர்:

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம்

கோயமுத்தூர் ஜில்லா

Printed at Sri Ramakrishna Mission Vidyalaya Printing Press, Coimbatore Dt.

# கல்வி

ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள்
அருளியது

திரு. சு. அவிநாசிலிங்கம்
ஆங்கிலத்தில் தொகுத்துத்
தமிழாக்கியது



ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம்
கோயமுத்தூர் ஜில்லா

# பதிப்புரை

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம் தமிழ்ப் பணி செய்ய முன்வந்திருப்பதை நண்பர்கள் அறிவார்கள். 'திருக்கேதார யாத்திரை' தமிழ் அன்னையின் திருப் பாதங்களில் நாங்கள் இட்ட முதல் மலராகும். இஃது இரண்டாவது.

திருக்கேதார யாத்திரையைத் தமிழ் மக்கள் மிக்க அன்புடன் வரவேற்றிருக்கிறார்கள். இதையும் அங்ஙனமே ஏற்பார்கள் என்று நம்புகிறோம்.

இதன் ஆங்கிலப் பதிப்புக்கு மகாத்மா காந்தியடிகள் கொடுத்த முகவுரைக் கடிதம் இதிலும் மொழி பெயர்த்து வெளியிடப் பெற்றிருக்கிறது.

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம்
7-3-1944

பதிப்பாளர்

சேவாகிராமம்
வார்தா (மார்க்கம்)

*அன்பார்ந்த அவினுசி,*

*விவேகானந்த சுவாமிகள் எழுதியிருக்கும் நூல்களுக்கு எவருடைய முகவுரையும் தேவையில்லை. அவை தடுக்கமுடியாத உணர்ச்சியை நம் மனத்தில் உண்டாக்குகின்றன.*

*உனதன்புள்ள,*

பாபு

22-7-'41

(மகாத்மா காந்தி)

# முகவுரை

புதிய இந்தியாவுக்கு அடிகோலியவர்களுள் ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் ஒருவர். அவர் செய்த வீர முழக்கம் உறங்கிக் கொண்டிருந்த நம் நாட்டு மக்களைத் தட்டி யெழுப்பியது. ஆண்மையும் வீரமும் செறிந்த அவருடைய சொற்களைப் படிக்குந்தோறும் நமது உள்ளத்தில் உயரிய உணர்ச்சிகள் உதிக்கின்றன. இத்தகைய மகான் ஆங்காங்குக் கல்வியைப் பற்றிக் கூறிய உரைகளை ஒன்று சேர்த்து வெளி யிடுதல் கல்வியுலகில் பணி ஆற்றும் ஊழியர்களுக்கு உதவுவ தாயிருக்கும்.

அப்பணியை மேற்கொள்ள வேண்டுமென்று கொஞ்ச காலமாக மனத்தில் எண்ணமிருந்தது. இப்பொழுது நடந்து வரும் சத்தியாக்கிரகத்தின் காரணமாகச் சிறை சென்றபோது அதற்கு வேண்டிய அவகாசம் கிடைத்தது. திருச்சிச் சிறை யிலேயே இப்பணியின் பெரும்பாகம் ஆற்றப்பட்டது. முதலிலே இது ஆங்கிலத்தில் தொகுக்கப் பெற்றுச் சென்னை ஸ்ரீ ராம கிருஷ்ண மடத்தாரால் பிரசுரம் செய்யப் பெற்றது. பல நண்பர்களும் பெரியோர்களும் இதை மனமுவந்து வரவேற்ற னர்; இதைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிடுவது தமிழ்ச் சகோதரர்களுக்கு உதவியாயிருக்குமென்றும் அபிப் பிராயப்பட்டனர். அதன் காரணமாக இந்நூல் வெளிவரு கிறது. சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தார் தமிழில் வெளி யிட்டுள்ள 'எனது தாய் நாடு,' எனது போர்முறை,' 'கரும யோகம்,' 'ராஜயோகம்' ஆகிய நூல்களிலுள்ள சில பக்கங்கள் இந்நூலுக்கு உதவியாயிருந்தன. இவற்றை உபயோகிக்க அவர்கள் கொடுத்த அனுமதிக்கு எங்கள் நன்றி உரியது.

ஸ்ரீ ராமகிருஷ்ண<br>மிஷன் வித்யாலயம்<br>7-3-1944

தி. சு. அவினாசிலிங்கம்.

## பொருளடக்கம்

# 1. ஆண்மை தரும் கல்வி

**கல்வியின் முதன்மை**

ஐரோப்பாவில் பல நகரங்களுக்கு நான் சென்றிருக்கிறேன். அங்கு ஏழை மக்களும் எவ்வளவு நாகரிகத்துடனும் சௌகரியத்துடனும் வாழ்கிறார்கள் என்பதைக் கவனித்திருக்கிறேன், அப்பொழுதெல்லாம் நம் நாட்டு ஏழை மக்களின் நினைவு என் மனத்தில் வர, கண்ணீர் சிந்தி அழுதிருக்கிறேன். இந்த வித்தியாசத்திற்குக் காரணம்தான் என்ன? 'கல்வி' என்பதுதான் எனக்குக் கிடைத்த விடை. கல்வி, தன்னம்பிக்கை— இவற்றின் மூலமே, நம்முள் மறைந்திருக்கும் தெய்விகச் சக்தியை நாம் வெளிப்படுத்த முடியும்.

அயர்லாந்திலிருந்து அமெரிக்காவுக்குக் குடியேற வரும் மனிதர்களை நான் நியூயார்க் நகரத்தில் கவனித்திருக்கிறேன். அவர்கள் வரும்போது மனம் தளர்ந்து, வாழ்க்கையில் அடிபட்டுச் சலித்துப்போன தோற்றத்துடன், எவ்விதமான நல்ல உடையுமின்றி, கையில் காசுமின்றி, மனத்தில் உற்சாகமுமின்றி வருவார்கள். கையில் ஒரு தடி, அதன் ஓரத்தில் சில கந்தைத் துணிகள் — இவையே அவர்களிடமிருந்த சொத்துக்கள். அஞ்சிய நடையும் வெருண்ட பார்வையும் அவர்களிடம் தென்படும். ஆனால், ஆறு மாதங்களில் இந்தக் கோலம் முற்றிலும் வேறுபடுகிறது: நிமிர்ந்து நடக்கிறார்கள்; உடைமாறியிருக்கிறது; அவர்கள் கண்களிலும் நடையிலும் முன்னிருந்த பயமும் மருட்சியும் இல்லை. இதற்குக் காரணம் என்ன? அயர்லாந்தில் இவர்களை கேவலமாக நினைத்தும், கேவலமாக நடத்தியும் வந்தார்கள்.

இயற்கையே அவர்களில் ஒவ்வொருவனையும் பார்த்து, 'அப்பா உனக்கு நல்வாழ்வு கிடையாது நீ அடிமையாகப் பிறந்து அடிமையாகவே உன் வாழ்க்கையைக் கழித்து அடிமையாகவே சாக வேண்டியதுதான்' என்று உரைத்த மாதிரி யிருந்தது பிறவியிலிருந்தே இதுபோன்ற வார்த்தைகளைக் கேட்டதால், அவற்றை அவன் நம்பி தான் மிகவும் தாழ்ந்தவன் என்ற உணர்ச்சியால் மயங்கிக் கிடந்தான். ஆனால், அமெரிக்காவில் அவன் அடி எடுத்து வைத்ததும், வேறு ஒலிகள் அவன் காதில் விழுந்தன: 'அப்பா, எங்களைப் போல் நீயும் ஒரு மனிதன்; உலகில் உயர்ந்த காரியங்கள் அனைத்தையும் சாதித்தவர்கள் மனிதர்கள். அவர்கள் உன்னையும் என்னையும் போன்றவர்களே. ஆண்மை மாத்திரம் இருந்தால், நம்மைப் போன்ற மனிதர் எதையும் செய்து முடிக்க முடியும். எனவே, தைரியத்தை மேற்கொள்!' இவ்வார்த்தைகளைக் கேட்டு அவன் நிமிர்ந்து பார்த்தான். அவ்வார்த்தைகள் உண்மை என்பதை உணர்ந்தான். இயற்கையே அவன் முன் நின்று, 'எழுந்திரு, விழித்திரு, கருதிய கருமம் கைகூடும்வரை உழைத்திடு' என்று கூறுவது போலிருந்தது.

**எதிர்மறைக் கல்வி கொடிது**

அயர்லாந்திற் போலவே, நம் நாட்டுச் சிறுவர்களும், *எதிர்மறைக் கல்வி பெறுகிறார்கள். இந்தக் கல்வி முறையில் சில நல்ல அம்சங்கள் இருக்கின்றன. ஆனால், இதன் கெடுதல்கள் அதன் நல்ல அம்சங்கள் அனைத்தையும் மறைக்கும்படி அவ்வளவு அதிகமா யிருக்கின்றன. முதலாவதாக, அந்தக் கல்வி முறை நம் மக்களுக்கு மனிதத் தன்மை அளிக்கக் கூடிய கல்வியாக இல்லை; அது முற்றிலும்

* மக்கள் மனத்தில் தன்னம்பிக்கையையும் சிரத்தையையும் ஊட்டாத கல்வி எதிர்மறைக் கல்வி எனப்படும்.

எதிர் மறைத் தன்மை வாய்ந்ததா யிருக்கிறது. எதிர்மறை உணர்ச்சியை ஊட்டும் கல்வி அல்லது பயிற்சி, சாவினும் கொடிது.

நாம் எவ்விதமான சக்தியும் வலிமையும் அற்றவர்கள் என்று அக்கல்வி நமக்குப் போதிக்கிறது உலகில் உயர்ந்த பெரியோர்கள் நம் நாட்டில் தோன்றியிருக்கிருர்கள் என் பதைச் சாதாரணமாக நமக்கு உணர்த்துவதேயில்லை. * உடன்பாட்டு முறையில் நமக்கு எதுவும் கற்பிக்கப்படுவது கிடையாது. நம் கைகளையும் கால்களையும் சரியாகப் பயன் படுத்தக்கூட நாம் கற்றுக் கொள்ளவில்லை. இதன் காரண மாக, சென்ற ஐம்பது ஆண்டுகளில் இக் கல்வியின் மூலம் அறிவு வளர்ச்சியில் தேர்ந்த ஒருவர்கூட நம்மிடையே தோன்றவில்லை. தற்காலத்தில் நம் நாட்டில் தோன்றிய அறிவாளிகள் அனைவரும் வெளிநாடுகளில் கல்வி பயின்ற வர்களாகவோ, நம் நாட்டில் இன்னும் சிற்சில இடங்களில் திகழும் பழைய கலாசாலைகளில் மறுபடியும் பயின்று தங்களைப் பரிசுத்தப் படுத்திக்கொண்டவர்களாகவோ இருக் கிருர்கள்.

**கல்வி வெறும் விஷயங்களைத் திணிப்பதன்று**

கல்வியென்பது ஒருவனுடைய மூளையில் பல விஷயங் களைத் திணிப்பதன்று. அப்படித் திணிக்கப்படும் விஷ யங்கள் வாழ்நாள் முழுவதும் அவனேடு ஒன்ருமல் உபத்திரவம் செய்துகொண் டிருக்கும். அதனல் என்ன பயன்? கற்கும் விஷயங்கள் நன்ருக ஜீரணமாகிப் பயன் பட வேண்டும். அவை உயிரூட்டுவனவாய், ஊக்கம் அளிப்பனவாய், மனிதத்தன்மை தருவனவாய், ஒழுக்கம் அமைப்பனவாய் இருத்தல் வேண்டும். நீங்கள்

* நம் மனத்தில் தன்னம்பிக்கையும் சிரத்தையையும் வளர்க்கக் கூடிய முறை உடன்பாட்டு முறை எனப்படும்.

ஐந்தே ஐந்து உயர்ந்த கருத்துக்களை நன்ருய்க் கிரகித்து, அவற்றை உங்கள் வாழ்க்கையிலும் நடத்தையிலும் ஊன்றி நிற்கும்படி செய்வீர்களாஞல், ஒரு பெரிய புத்தகசாலே முழுவதையும் மனப்பாடம் செய்தவனை விடப்பெரிய கல்விமான்களாவீர்கள். வெறும் விஷயங்களைச்சேகரிப்பதுதான் கல்வியென்ருல் புத்தகசாலேகளன்ருே பெரிய மகான்களாகியிருக்கும்! அகராதிகளன்ருே ரிஷிகளாகிவிடும்!

அன்னிய மொழியிலுள்ள மற்ற மனிதர்களுடைய எண்ணங்கள் சிலவற்றை மனப்பாடம் செய்வதை நீங்கள் கல்வியென கொண்டிருக்கிறீர்கள். பல விஷயங்கள் மூளையில் திணிக்கப்பட்டு ஒரு சர்வ கலாசாலேப் பட்டம் பெற்றுவிட்டால், கல்விமான்கள் என்று உங்களை நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். இது உண்மையில் கல்வியாகுமா? உங்கள் கல்வியின் நோக்கமென்ன? ஒரு குமாஸ்தா ஆவது அல்லது வக்கீல் ஆவது, அல்லது மீறிஞல் ஒரு மாஜிஸ்ட்ரேட் ஆவது — இவைதாஞ உங்கள் லட்சியம்? இவை உங்களுக்கும் உங்கள் நாட்டிற்கும் என்ன நன்மை செய்யும்? கண் விழித்துப் பாருங்கள்? அளவற்ற உணவுக்கும் வளத்திற்கும் பெயர் பெற்ற இப்பாரத நாட்டில் இப்பொழுது உணவின்றித் தவிப்போர் எவ்வளவு பேர் என்பதைக் கவனித்துப் பாருங்கள்! உங்கள் கல்வி இக்குறையை நீக்குமா? சாதாரண மக்கள் தங்கள் வாழ்க்கையைத் தைரியமாக நடத்துவதற்கு உதவக்கூடிய பயிற்சியைக் கொடாத ஒரு கல்வியும் கல்வியாகுமா? மக்கள் மனத்தில் புதைந்துள்ள மன வலிமையையும், தரும சிந்தையையும், ஆண்மையையும் வெளிப்படுத்தாத ஒரு கல்வி முறையைக் கல்வியென்று சொல்லுதல் தகுமா?

ஒழுக்கம் அளிப்பது, மனவலிமையைத் தருவது, புத்தியை விசாலிக்கச் செய்வது, ஒருவனைத் தன் வலிமை

கொண்டு தன்னம்பிக்கையுட னிருக்கச் செய்வது ஆகிய இவற்றையளிக்கும் கல்வியே நமக்கு வேண்டும். அன்னிய ஆதிக்கமின்றி நம் சொந்த ஞானத்துறைகள் எல்லாவற்றையும் நாம் ஆராய்ச்சி செய்தல் அவசியம். அதனோடு ஆங்கில மொழியையும் மேலை நாட்டு விஞ்ஞான சாஸ்திரங்களையும் நாம் கற்க வேண்டும். இவற்றுடன் தொழிற் கல்வியும், தொழில் வளர்ச்சிக்குள்ள சகல அறிவும் நமக்குத் தேவை. இவற்றின் மூலம், படித்தவர்கள் உத்தியோகம் தேடி அலைவதற்குப் பதிலாக, தங்களுக்கு வேண்டிய அளவு சம்பாதித்துக் கொள்ளவும், கஷ்ட காலத்திற்கெனச் சிறிது பொருள் சேகரித்து வைக்கவும் ஆற்றல் பெறுவார்கள்.

**நாம் வேண்டுவது**

ஆண்மையளிப்பதே கல்வியின் இலட்சியமா யிருக்க வேண்டும். எல்லாப் பயிற்சிகளின் நோக்கமும் அதுவே. மனிதனுடைய மனோசக்தியைத் தன் வயப்படுத்தி, பயன் படுத்தத் தக்க துறையில் செலுத்துவதே கல்வி யெனப்படும். இரும்பு போன்ற தசைகளும், எஃகு போன்ற நரம்புகளும், எதனாலும் தடுக்க முடியாத அளவற்ற சக்தியும் வாய்ந்தவர்களே நம் நாட்டிற்கு இப்போது தேவை. அவர்கள் சக்தியானது, எதற்கும் அஞ்சாததாய் அண்ட சராசரங்களின் அந்தரங்க இரகசியங்களையும் ஊடுருவி அறிய வல்லதாய், அறிந்தபின் அவற்றின் நோக்கத்தை எவ்வகையிலேனும் பூர்த்தி செய்யும் ஆற்றல் உள்ளதாய், அவசியமானால் ஆழ்ந்த கடலின் அடியிலும் செல்ல வல்லதாய், மரணம் ஏற்படினும் அஞ்சாததாய் இருத்தல் வேண்டும். அத்தகைய ஆண்மை தரக் கூடிய மதமே நமக்கு அவசியம்; ஆண்மை தரக்கூடிய கொள்கைகளே நமக்கு வேண்டும்; ஆண்மை தரக்கூடிய கல்வியே நமக்குத் தேவை.

**ஆண்மை தரும் கல்வி**

# 2. கல்வியின் தத்துவம்

**மனிதன் உள்ளத்தில் புதைந்திருப்பது**

மனிதனுக்குள் புதைந்திருக்கும் பூரணத்தை வெளிப்படுத்துவதே கல்வி யெனப்படும். அறிவு மனிதனிடத்து இயல்பாக அமைந்திருப்பது அது புறத்தே யிருந்து வருவதொன்றன்று; அது அகத்தே அமைந்திருப்பது. ஒரு மனிதன் 'அறிகிறான்' என்று சொல்லுகிறோம். அதை மனோதத்துவ சாஸ்திரத்திற்கேற்ற மொழியில் சொல்லின் 'அதைத்கண்டுகொள்கிறான் அல்லது அறியாமை திரையை நீக்குகிறான்' என்று சொல்லுதல் வேண்டும். ஆராய்ந்து பார்க்குமிடத்து எல்லையற்ற அறிவுக் களஞ்சியமாகிய ஆன்மாவை மூடியிருக்கும் அறியாமைத் திரையை நீக்குதலே 'கற்றல்' என்பதன் பொருளாகும். தத்துவ சாஸ்திரியாகிய நியூட்டன் உலக கவர்ச்சி நியதியைக்* கண்டுபிடித்தார் என்கிறோம். அது அவர் வருவாரென்று எங்காவது மூலையில் காத்துக் கொண்டிருந்ததா? இல்லை. அது அவர் உள்ளத்திலேயே யிருந்தது. காலம் வரவும் அவர் அதைக் கண்டு வெளியாக்கினர். உலகு இதுகாறும் பெற்ற அறிவு முழுதும் மனத்திலிருந்து வந்தது. சராசரத்திலுள்ள அறிவு அனைத்தும் பொதிந்த எல்லையற்ற நூற்களஞ்சியம் நமது உள்ளத்தே இருக்கிறது. ஆதலால் நம்மால் கற்கப்படும் பொருள் நமது உள்ளமே புறத்தேயுள்ள பிரபஞ்சம் நாம் நமது உள்ளத்தை ஆராய ஒரு வெறும் தூண்டுகோல்: நம் உள்ளத்தை நாம் கற்றற்கு அவசியமான குறிப்பையும், சந்தர்ப்பத்தையும் கொடுக்கும் கருவியே அது. பழம் விழுந்த

---

* Law of gravitation.

குறிப்பினைக் கண்ட நியூட்டன், அதன் காரணத்தை ஆராயத் தமது உள்ளத்தை நோக்கினார். முன்பு கண்டு பிடித்த முடிவுகளோடு ஒரு புது முடிவு புலப்பட்டது. அங்ஙனம் அவர் கண்ட முடிவினை நாம் உலகக் கவர்ச்சி நியதியெனக் கொள்ளுகிறோம். அவ்விதி, பழத்திலோ அல்லது பூமியின் நடுவிலோ இருக்கவில்லை.

**கற்றல் என்றால் என்ன?**

ஆகவே ஞானம் அனைத்தும் நம் உள்ளத்தேதானிருக்கிறது. இவை சாதாரணமாக மறைந்து கிடக்கின்றன. இவற்றை மூடியிருக்கும் திரையை அகற்றுதலே கல்வி கற்றலாகும்; இவ்வாறு திரையைப் படிப்படியாக அகற்றுவது அறிவின் வளர்ச்சியே ஆகிறது. எவனொருவனுடைய உள்ளத்தினின்றும் இத் திரை பெரிதும் அகன்று விட்டதோ அவன் பேரறிஞன் ஆகிறான். இங்ஙனம் அகலப் பெறாதவன் பேதையாயிருக்கிறான். முற்றும் அகலப்பெற்றவன் முழுதும் உணர்ந்த ஞானியாகிறான். கல்லினுள்ளே நெருப்பு இருப்பது போல உள்ளத்தினுள் அறிவு அமைந்திருக்கிறது. கல்லை ஒன்றோடொன்று மோதும் போது தீ வெளியாகிறது. புறத்தே தோன்றும் குறிப்பின் மூலம் அறிவு வெளியாகிறது சகல அறிவும் ஆற்றலும் நம் உள்ளத்திலேயேயிருக்கின்றன. எல்லா விதமான சக்திகள், இயற்கை ரகசியங்கள், ஆற்றல்கள் எனப் பலவாறாக நாம் கூறும் அனைத்தும் மனத்துள்ளே யிருக்கின்றன. மனித ஆன்மாவே சகல ஞானத்திற்கும் பிறப்பிடமாயிருக்கிறது. அனந்த காலமாய்த் தன் மனத்தில் புதைந்திருக்கும் ஞானத்தை வெளிப்படுத்துவதே கல்வியாகும்.

உண்மையில் எவரும் மற்றவரிடம் கற்பதில்லை. ஒவ்வொருவரும் தமக்கு தாமேதான் கற்றுக்கொள்ள வேண்டும். புறத்தேயுள்ள ஆசான் தூண்டுகிறான். அதனால், அகத்தே உள்ள ஆசான் விழித்தெழுந்து அறிந்து கொள்ள நமக்கு

உதவி செய்கிருன். நம்முடைய அனுபவத்திஞலும், எண்ணங்களிஞலுமே எல்லாம் தெளிவாகின்றன. பல ஏகரா கொண்ட நிலத்தைக் கவர்ந்து பரந்து வானளாவி வளர்ந்திருக்கும் ஆலமரம், அதன் விதையில் அடங்கி யிருந்தது. அதன் விதை கடுகில் கால் பங்கிருக்கலாம். குழந்தை தாஞ இம்மரத்தில் காணும் சக்தியனைத்தும் கவே கற்கிறது அந்த நுண்ணிய வித்தில் அடங்கி யிருந்தது. அதேபோல் இப்போது காணப்படும் அபார மூளைகளும் ஆதியில் அணுப்பிரமாணமா யிருந்த விதையில், புதைந்திருந்தன. இது விந்தையாகத் தோன்றும்; ஆஞல் உண்மை! நாம் ஒவ்வொருவரும் அணுவுக்கணுவான ஜீவ அணுவிலிருந்தே தோன்றி யிருக்கிருேம். நம் சக்திகளனைத்தும் அணுவுக்குள் அடங்கி யிருந்தன. நம் சக்திகளனைத்தும் உணவிலிருந்து வந்தன வெனச் சிலர் நினைக்கலாம். ஆஞல், அப்படிச் சொல்ல முடியாது. ஏனெனில், மலையத்தனை உணவைக் குவித்தாலும் இச்சக்தியை உண்டாக்க முடியுமா? மனித ஆன்மாவில் அளவற்ற சக்தி அடங்கியிருக்கிறது. மனிதன் அதை உணர்ந்திருக்கலாம் அல்லது உணராமலிருக்கலாம்; எனினும் எல்லையற்ற ஆற்றல் ஆன்மாவினுள் அடங்கி நிற்கிறது என்பது உண்மை. இதைச் சரியாக உணர்ந்த மாத்திரத்தில் மனிதன் இச் சக்தியை வெளிப்படுத்த முடியும்.

இத் தெய்வ ஒளி பலர் மனத்தில் மறைந்திருக்கிறது. அது ஓர் இருப்புப் பாத்திரத்தினுள் வைத்த விளக்கை ஒக்கும். இரும்பின் மூலம் விளக்கின் ஒளி பிரகாசிக்க முடியாது. ஆஞல், தூய்மையாலும் சுயநல மின்மையாலும் பாத்திரத்தின் தன்மையை மாற்றி, கடைசியில் அதைக் கண்ணுடி மாதிரி ஒளி விட்டு விளங்கச் செய்ய முடியும். ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரைப் போன்ற பெரியோர்கள், இவ்

விதம் இருப்புப் பாத்திரம் கண்ணுடிப் பாத்திரமாக மாறுவது போல், தூய நிலையை அடைந்தவர்கள். அவர்கள் மூலம் அவர்களுக்குள்ளிருக்கும் தெய்விக ஒளி பிரகாசித்துக் கொண்டிருந்தது.

ஒரு செடியை அதன் இயற்கையை மீறி வளரச்செய்ய முடியாது; அதைப் போன்றதே குழந்தைக்குக் கல்வி புகட்டுதலும். செடி தன் இயற்கைப்படி குழந்தை வளர தானே வளரும்; அங்ஙனமே குழந்தை உதவி செய்க யும் தன் இயற்கையை ஒட்டியே சுயமாகக் கற்றுக்கொள்ளுகிறது ஆனுல், நாம் ஒன்று செய்ய முடியும். குழந்தை தன் சுபாவப்படி வளருவதற்கு உதவி செய்ய முடியும். அதன் வளர்ச்சியை நாம் துரிதப் படுத்த முடியாது. ஆனுல், அதன் வளர்ச்சிக்கு இடையூருக இருப்பவற்றை நாம் நீக்கலாம். அதற்கு மேல் அது பெறும் அனுபவத்திலிருந்துதான் அறிவு வளர்ச்சி உண்டாகும். ஒரு செடியின் வளர்ச்சிக்கு உதவியா யிருக்கும் பொருட்டு, பூமியை கிளறி விடலாம், சுற்றிலும் வேலியிட்டு மற்றப் பிராணிகள் அதை அழிக்காமல் காப்பாற்றலாம்; அது வளருவதற்குத் தேவையான எரு, தண்ணீர், காற்று முதலியவற்றை அதற்குக் கொடுக்கலாம். இவ்வளவோடு நம் வேலை நின்று விடுகிறது. அதற்கு வேண்டியவை அனைத்தும் அது தானே உட்கொண்டு தானே ஜீரணம் செய்ய வேண்டும்; அது போலத்தான் ஆசிரியன் செய்யும் உதவியும். ஆசிரியன் தான் கற்பிப்பதாக எண்ணுவதனுலேயே எல்லாவற்றையும் கெடுத்து விடுகிருன். சகல ஞானமும் மனிதனுக்குள்ளேயே இருக்கிறது. அதைத் தூண்டி எழுப்புதலே தேவை. அதுவே ஆசிரியனின் வேலை. சிறுவர்கள் தங்கள் சொந்த அறிவை உபயோகப்படுத்தவும், தங்கள் கை, கால், கண், செவி ஆகியவற்றைச் சரியாகப் பயன்படுத்தவும் தெரிந்துகொள்

ளும் அளவிற்கு நாம் அவர்களுக்கு உதவி செய்தால் போது மானது.

**தவறு**

கழுதையை நன்கு புடைத்தால் அது குதிரையாகுமென்று யாரோ சொல்லக் கேட்டு அவ்விதமே ஒருவன் செய்தான் என்று ஒரு கதையுண்டு. இத்தகைய பலாத்கார முறை முறையிலேயே நம் பிள்ளைகளுக்கு இப் போது கல்வியளிக்கப்படுகிறது. இம் முறை ஒழிய வேண்டும். பிள்ளைகளின் விஷயத் தில் பெற்றோர் அதிகமாகப் பிரவேசித்துச் சிறு விஷயங்களி லும் தங்கள் விருப்பம் போல் செய்யும்படி வற்புறுத்துவதனு லேயே பிள்ளைகள் தாங்கள் சுயமாக நினைக்கும் பழக்கத்தை இழந்து சரியான வளர்ச்சி யடையாமற் போய்விடுகின்றனர். ஒவ்வொருவனிடமும் பல உணர்ச்சிகள் இருக்கின்றன. அவை சரியாக திருப்தி செய்யப் பெறவேண்டும். பலாத் கார முறையில் சீர்திருத்தம் செய்ய முயல்வதில் சீர்திருத்தத் தின் நோக்கம் குன்றுகிறதே ஒழிய நிறைவேறுவதில்லை. ஒருவனுக்குச் சுயேச்சை யளித்தால் அவன் பலம் பெற்றுச் சிங்கம் போலாக வழியுண்டு. ஆனால், அவனை பலாத்காரப் படுத்தி அடக்கி வைத்தால் அவன் தன் குறைகளை மறைத்து நரி போலாவான்.

**உடன்பாட்டு முறை**

நாம் உடன்பாட்டு முறையில் உயர்ந்த எண்ணங்களை யும் இலட்சியங்களையும் கொடுக்க வேண்டும். எதிர்மறை எண்ணங்கள் மக்களைப் பலவீனப் படுத்து கின்றன. பெற்றோர் சிலர் தங்கள் பிள்ளைகளை எப்பொழுதும் எழுதும்படியும் படிக்கும்படியும் வற்புறுத்திக் கொண்டும், "நீங்கள் உதவாக்கட்டைகள், மடச்சாம்பிராணிகள்" என்று சதா திட்டிக்கொண்டும் இருப்பதை நீங்கள் கவனித்திருப் பீர்கள். அப் பிள்ளைகள் பல சமயங்களில் அப்படியே

உதவாக் கட்டைகளாகவும் மடையர்களாகவும் ஆனமையை நீங்கள் கண்டதில்லையா? அன்புடன் புத்திமதி சொல்லி, அவர்களை உற்சாகப்படுத்தினல் அவர்கள் கண்டிப்பாக அபிவிருத்தி யடைவார்கள். உடன்பாட்டு முறையில் அவர்களுக்கு உயர்ந்த கருத்துக்களைக் கற்றுக் கொடுத்தால், அவர்கள் சுயேச்சையாகத் தாங்களே தங்கள் காரியங்களை நிர்வாகம் செய்யக்கூடிய சக்தியைப் பெறுவார்கள். மொழியிலாகட்டும் அல்லது இலக்கியத்திலாகட்டும், கவியிலாகட்டும் அல்லது இதர கலைகளிலாகட்டும், நினைவிலாகட்டும் அல்லது செயலிலாகட்டும்: மக்கள் செய்யும் குற்றங்களை காட்டிக் கடிவதில் மட்டும் பயனில்லை. ஆனல் அவர்கள் குற்றங்களின்றி எவ்விதம் இன்னும் நன்ருய்த் தங்கள் பணிகளைச் செய்ய முடியும் என்பதை எடுத்துக்காட்ட வேண்டும். கற்பிக்கப் பெறுபவர்களின் தன்மையை அனுசரித்துக் கற்பித்தலே கல்வி பயிற்றுவதற்கு ஏற்ற முறை. நம்முடைய முந்திய வாழ்க்கைகள் நமது மனத்தின் போக்கைத் தீர்மானம் செய்திருக்கின்றன. எனவே, நமக்குக் கொடுக்கப்படும் கல்விப் பயிற்சி நமது மனப் போக்குக்கு ஏற்றதாயிருக்க வேண்டும். ஒவ்வொருவனை யும் அவன் உள்ள நிலையிலிருந்து முன்னேறும்படி உதவி செய்ய வேண்டும். மிகவும் கடையானவர்கள் என்று நாங்கள் நினைத்த பேர்களுக்குக்கூட, ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர் ஊக்கமளித்து அவர்களின் வாழ்க்கையின் போக்கையே புதிதாக மற்றியமைத்த அற்புதத்தை நாங்கள் அறிவோம். எவருடைய தனிப்பட்ட சுபாவத்தை யும் அவர் அழிக்க வில்லை. மிகத் தாழ்ந்தவர்களுக்கும் உற்சாக மளிக்கக்கூடிய வார்த்தைகள் சொல்லி அவர்களை முன்னேற்றமடையச் செய்தார்.

சுதந்திரமே மனித வளர்ச்சிக்கு முதல் அவசியம். "இந்தக் குழந்தை அல்லது அந்தக் குழந்தைக்கு நான் விமோ

சனம் அளிப்பேன்'' என்று யாராவது சொல்லத் துணிவார்களேயானால், அது தவறு, முற்றிலும் தவறு என்று நான் சொல்வேன். தயை செய்து ஒதுங்கி நில்லுங்கள்: அவரவர் பிரசினைகளை அவரவர்களே தீர்த்துக் கொள்ளுவார்கள். கடவுளுக்கு மீறின சக்தி இருக்கிறதென்று நினைக்க உங்களுக்கு அவ்வளவு அகம்பாவமா? ஒவ்வோர் ஆன்மாவும் கடவுளின் வடிவம் என்பதை நீங்கள் உணரமாட்டீர்களா? எல்லோரையும் கடவுளாகப் பாருங்கள். சேவை செய்யத்தான் உங்களுக்கு உரிமை உண்டு. உங்களுக்கு அந்தப் பாக்கியம் இருந்தால் கடவுளின் குழந்தைகளுக்குச் சேவை செய்யுங்கள் ஆண்டவனின் குழந்தைகளுக்கு உதவிசெய்ய முடியுமானல், நீங்கள் அவன் அருள் பெற்றவர்களாவீர்கள். மற்றவர்களுக்கு இந்தச் சந்தர்பம் கிடைக்காமலிருக்க, நீங்கள் இதைப் பெற்றது ஆண்டவன் கிருபை உங்கள் பால் இருக்கிற தென்பதற்கு அறிகுறி என்று உணருங்கள்! இச் சேவையை இறைவனின் ஆராதனையாகப் பாவித்துச் செய்வீர்களாக!

சுதந்திரம் வளர்ச்சிக்கு அவசியம்

# 3. கல்வி கற்கும் முறை

அறிவு வளர்ச்சிக்கு ஒரே ஒரு முறைதான் உண்டு. அது தான் மனத்தை ஒருமுகப்படுத்தல் என்பது. கல்வியின் அடிப்படையான இலட்சியமே மனத்தை ஒருமுகப்படுத்துவதுதான். சாதாரண மனிதனிலிருந்து சகல சித்திகளையும் பெற்ற யோகிவரை. எல்லோரும் தங்கள் அறிவு வளர்ச்சிக்கு அம்முறையைத்தான் பின்பற்றியாக வேண்டும். இரசாயன சாலையில் வேலைசெய்யும் சாஸ்திரி தன் மனோசக்தி முழுவதையும் ஒருமுகப்படுத்தி பிரகிருதிவஸ்துக்களின் மேல் செலுத்துகிறான்; அப்பொழுது அவனுக்கு இப் பிரகிருதி வஸ்துக்களின் உண்மைத் தன்மை புலனாகி அறிவு உண்டாகிறது. வான சாஸ்திரி தன் மனோசக்தியை ஒரு முகப்படுத்தித் தூரதிருஷ்டிக் கண்ணாடியின் மூலம் தான் ஆராய விரும்பும் கிரகங்களின் மீது செலுத்துகிறான். அப்பொழுது நட்சத்திரங்களும், சூரிய மண்டலங்களும் முன்வந்து அவனுக்கு தங்கள் இரகசியங்களை வெளிப்படுத்துகின்றன. கல்லூரிகளில் வேலை செய்யும் ஆசிரியர்களும், கல்வி பயிலும் மாணவர்களும், இன்னும் அறிவு வளர்ச்சிக்காகப் பாடுபடுவோர் அனைவரும் இவ்விதம் தங்கள் மனத்தை ஒருமுகப்படுத்துவதன் மூலமே தங்கள் அறிவை அபிவிருத்தி செய்து கொள்ளுகின்றனர்.

**மன ஒருமை**

மனத்தை ஒருமுகப்படுத்துகிற அளவுக்கு அறிவு வளர்ச்சியும் அதிகமாகும். செருப்புத் தைப்பவனுங்கூடத் தன் வேலையில் மனத்தை ஒருமுகப்படுத்தினால் நன்றாகச் செருப்புத்தைக்க முடியும். சமையல் காரன் தன் மனத்தை ஒருமுகப்படுத்தினால்

**அதன் சக்தி**

நன்ருகச் சமையல் செய்வான். பணம் சம்பாதிப்பதிலாகட்டும், கடவுளைத் தொழுவதிலாகட்டும்—எதைச் செய்வதிலாகட்டும் மன ஒருமை அதிகமாயிருக்கும் வரைஅது நன்ருக நடைபெறும். இயற்கையால் மூடப்பட்டிருக்கும் அறிவுச் சுடரைப் பெறுவதற்கு இஃது ஒன்றே சிறந்த நெறியாம்.

**மனிதருக்குள் வித்தியாசத்தின் காரணம்**

சாதாரண மனிதன் தன் மனேசக்தியில் நூற்றுக்குத் தொண்ணூறு விழுக்காடு வீண் செய்துவிடுகிருன். இதஞல்தான் அவன் அடிக்கடி தவறுகள் செய்கிருன். பண்புடைய மனத்தைப் பெற்றவன் ஒரு தவறும் செய்யமாட்டான். மனிதனுக்கும் மிருகத்துக்கும் உள்ள முக்கிய வித்தியாசம் மனத்தை ஒருமுகப்படுத்துவதில்தான் இருக்கிறது. மிருகங்களைப் பழக்குகிறவர்கள் அவற்றுக்குச் சொல்லிக் கொடுப்பதை அவை அடிக்கடி மறந்து விடுவதை அறிவார்கள். எவ்விஷயத்தின் மேலும் அவை அதிக நேரம் மனத்தை ஒருமுகப்படுத்த முடியாததே அதற்குக் காரணம். இதில் தான் மனிதனுக்கும் மிருகத்துக்கும் உள்ள வித்தியாசம் இருக்கிறது. மனிதனுக்கும் மனிதனுக்கும் உள்ள வித்தியாசம் அவனிடத்திலுள்ள மனத்தை ஒருமுகப்படுத்தும் சக்தியைப் பெற்றுத்தான் இருக்கிறது. மிகத்தாழ்ந்த மனிதனை மிக உயர்ந்த மனிதனுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். மனத்தை ஒருமுகப்படுத்துவதில்தான் அவர்கள் வித்தியாசம் இருக்கிறது.

**அதன் பலன்**

எத்துறையிலும் வெற்றி பெறுவது இதைப்பொருத்ததாய் தான் இருக்கிறது. சங்கீதம், ஓவியம், சிற்பம், முதலிய எல்லா கலைகளிலும் உயர்ந்த தேர்ச்சி பெறச்செய்வது மன ஒருமை தான். மனத்தை ஒருமுகப்படுத்தி நமக்குள்ளேயே செலுத்திஞல், நம்முள்ளிருக்கும் நம் புலன்கள் அனைத்தும் நம் வசப்பட்டு நாம் கூறியவாறு செய்யும்.

கிரேக்கர்கள் தங்கள் ஒருமுகப்படுத்திய மனத்தை வெளி உலகின்மேல் செலுத்தினார்கள். அதன் காரணமாகச் சிற்பம் இலக்கியம் முதலிய கலைகளில் பூரணத்துவத்தை அடைந்தார்கள். இந்தியர்கள் தங்கள் ஒருமுகப்படுத்திய மனத்தை நம் வெளிப் புலன்களுக்கு எட்டாத ஆன்மீகத் துறையில் செலுத்தியதன் பயனாக யோகசாதனத்தை அபிவிருத்தி செய்தார்கள். உலகத்தின் இரகசியங்களை மூடி வைத்திருக்கும் கதவுகளைத் திறக்கக்கூடிய சக்தியைப் பெற்றால் உலகம் அதன் இரகசியங்களை நமக்களிக்கத் தயாராய் இருக்கிறது. அக்கதவுகளைத் திறக்கக்கூடிய வலிமை மாத்திரம் நாம் பெறவேண்டும். இவ்வலிமையை நமக்கு அளிக்கக்கூடியது மன ஒருமைதான்.

மன ஒருமையின் சக்தியே அறிவுக் களஞ்சியத்தின் திறவுகோல், நாம் இருக்கும் இப்போதைய நிலையில் நம் மனம் ஒருமுகப்படாது பல நூறு விஷயங்களில் செல்வதால் நம் சக்தி வீணாகிறது. நம் மனத்தை ஒருமுகப்படுத்த முயல ஆரம்பித்த உடனே, நாம் விரும்பாத பல எண்ணங்களும் உணர்ச்சிகளும் தோன்றி மனத்தை ஒருமுகப்படுத்த முடியாமல் செய்கின்றன. இவற்றை அடக்கி மனத்தை நம் வசப்படுத்துவது எங்ஙனம் என்பதே இராஜயோகம் நமக்குக் கற்பிக்கும் விஷயம். தொடர்ச்சியாகத் தியானம் செய்வது மன ஒருமையைத் தரக்கூடிய சிறந்த சாதனமாகும்.

அறிவுக் களஞ்சியத்தின் ஒரே திறவுகோல்

கல்வியின் இலட்சியம் விஷயங்களைப் பற்றிய ஞானத்தைச் சேகரம் செய்வதன்று. மன ஒருமையே கல்வியின் அடிப்படையான இலட்சியம் என்பது எனது முடிவு. நான் மறுபடியும் கல்வி கற்பதாக இருந்தால் விஷயங்களைப் பற்றிப்

படிக்கவே மாட்டேன். மன ஒருமையையும் மனத்தை எந்த இடத்திற்கும் எக்கணத்திலும் செலுத்தும் சக்தியையும் அபிவிருத்தி செய்வேன். அதற்குமேல் அவ் வுயர்ந்த சக்தியாகிய ஆயுதத்தைக் கொண்டு நான் விரும்பிய விஷயங்களை எளிதில் அறிந்துகொள்ள முடியும்.

**பிரமசரியத்தின் அவசியம்**

பன்னிரண்டு வருடங்கள் பிரமசரியத்தை தவருது அனுஷ்டித்து வருபவன் அளவற்ற சக்தியைப் பெறுகிருன். பிரமசரியம் சரியாகக் கையாளப்பட்டால் உயர்ந்த அறிவையும் ஆன்மீக சக்தியையும் அது நமக்களிக்கும். நம் விருப்பங்களை அடக்கியாளுவது பெறும் பயனை அளிக்கிறது, காம உணர்ச்சியை அடக்கி அதை மகத்தான ஆன்மீக சக்தியாக மாற்றிக் கொள்ளுங்கள். ஆன்மீக சக்தி அதிகரிருக்கும் வரையில் ஒருவன் மாபெருங் காரியங்களைச் சாதிக்க முடியும். நிறைந்த சக்தி இருப்பவர்கள் தாம் கடினமான காரியங்களை செய்துமுடிக்க இயலும். பிரமசரியத்தைச் சரிவர அனுஷ்டிக்காத காரணத்தினுல் தான் நம் நாடு இவ்வளவு சீர்குலைந்திருக்கிறது. பிரமசரியத்தைச் சரிவர அனுஷ்டிப்பதன் மூலம் எதையும் விரைவில் கற்கமுடியும். ஒரு தரம் கேட்டதும் தெளிவாகத் தெரிந்துகொள்ளும் சக்தியையும் சிறந்த ஞாபக சக்தியையும் அத்தகையவன் பெறுகிருன். பரிசுத்தமான மனம் அளவு இல்லாப் பலமும் மனத்திட்பமும் சக்தியும் பெறுகிறது. பூரண பரிசுத்தமின்றி ஆன்மீக பலம் கிடையாது. பிரமசரியத்தை அனுஷ்டித்தவர்கள் ஜன சமுதாயத்தில் மகத்தான செல்வாக்கைப் பெற்றவர்களாக இருந்திருக்கின்றனர், ஆன்மீகத் துறையில் சிறந்து விளங்கியிருந்தவர்கள் அனைவரும் பரிசுத்தமான வாழ்க்கையை ஏற்றவர்களாகவே இருந்திருக்கின்றனர். இப் பரிசுத்த வாழ்க்கையை அவர்களுக்கு அரிய சக்தியை அளித்திருக்கிறது.

ஒவ்வொரு மாணவனுக்கும், பிரமசரியத்தை அனு சரித்துப் பரிசுத்தமான வாழ்க்கையைப் பின்பற்றத் தக்க பயிற்சியை அளிக்க வேண்டும். அதற்கு மேல்தான் தன் னம்பிக்கையும் சிரத்தையும் உண்டாகும். பிரமசரியம் என்பது, மனம், வாக்கு, காயம் என்ற மூன்றிலும், எல்லா இடங்களிலும் சந்தர்ப்பங்களிலும் பரிசுத்தமாயிருப்பது. புறத் தூய்மை மாத்திரம் போதாது. பரிசுத்தமில்லா எண்ணங்கள், பரிசுத்தமில்லாச் செய்கைகளைப் போலவே தீமை விளைவிக்கக் கூடியவை. பிரமசாரியாக இருக்க விரும்பு கிறவன், தான் எண்ணும் எண்ணங்களிலும், பேசும் வார்த் தைகளிலும் செய்யும் செயல்களிலும் தூய்மையுடையவனாக இருத்தல் வேண்டும்.

நம் மக்கள் மனத்தில் மறுபடியும் தன்னம்பிக்கையை வளர்க்க வேண்டும். எதையும் தம்மால் சாதிக்க முடியும் என்ற நம்பிக்கையை நம் மக்களுக்குள் பிறப்பித்தாலொழிய, நம் சமூகத்துள் இப்பொழுது தோன்றியிருக்கும் பல பிரச் சினைகளைத் தீர்க்க முடியாது. நமக்கு வேண்டியவை சிரத்தையும் தன்னம்பிக் கையுமே. மனிதனுக்கும் மனிதனுக்கும் வித்தியாசத்தை உண்டுபண்ணுவது, அவ ரவருக்கிருக்கும் தன்னம்பிக்கையிலும் சிரத்தையிலுமுள்ள வித்தியாசமே யொழிய வேறு எதுவுமன்று. ஒருவனைப் பல வானாக்குவது அவனிடமிருக்கும் தன்னம்பிக்கை. மற்றொரு வனைப் பலவீனன் ஆக்குவது, அவனிடம் அத் தன்னம் பிக்கை இல்லாமையே. தன்னைப் பலமற்றவனாக நினைப் பவன் பலமற்றவனாகவே ஆகிறான் என்று எங்கள் குருநாதர் உரைப்பதுண்டு. அது முற்றிலும் உண்மை. அளவற்ற தன்னம்பிக்கை உங்கள் மனத்தில் புகவேண்டும். மேலை நாட்டு மக்களிடம் காணப்படும் சக்தி அவர்களுக்குத் தங்கள் உடல் பலத்திலுள்ள நம்பிக்கையினின்றும் உண்டானது.

சிரத்தையே அடிப்படை

நீங்கள் ஆன்மாவில் நம்பிக்கை வைத்தால், இன்னும் பன்மடங்கு சக்திபெற முடியுமன்றோ?

இந்த ஒரு விஷயத்தை நன்கு தெரிந்து கொள்ளும்படி மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன். தான் பலமற்றவன் சக்தியற்றவன் என்று சதா நினைப்பவனிடமிருந்து ஒரு நன்மையும் விளைவதில்லை. ஒருவன் அல்லும் பகலும், தான் தூக்கத்தில் ஆழ்ந்திருப்பவன், தாழ்ந்தவன், சக்தியற்றவன், ஒன்றுமில்லாதவன் என்றே நினைப்பானுனால் அவன் சக்தியற்றவனுகவே ஆகிருன். 'நான் சகல சக்தியும் பெற்றவன்; எதையும் செய்யக் கூடியவன்' என்று நினைப்பானுனல் அப்படியே ஆவான். நீங்கள் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்திருக்க வேண்டிய பெரிய உண்மை இது. நாம் அனைவரும் சர்வ சக்தியும் வாய்ந்த மகா சக்தியின் குழந்தைகள். நாம் எல்லையில்லாத தெய்வீகச் சோதியினின்றும் தோன்றிய பொறிகள். எப்படி நாம் சக்தியற்றவர்களாக முடியும்? "நாம் சகல சக்தியும் பொருந்தியவர்கள்; எக்காரியத்தையும் செய்து முடிக்கச் சித்தமாய் இருப்பவர்கள்; நாம் எக்காரியத்தையும் செய்து முடிக்க முடியும்" என்ற தன்னம்பிக்கை நம் முன்ஞேர் மனத்தில் இருந்தது. அவர்கள் தங்கள் பால் கொண்ட தன்னம்பிக்கையே அக்காலத்தில் உலகிற்குச் சிறந்த நாகரிகத்தை உண்டாக்கக்கூடிய சக்தியை அவர்களுக்களித்தது. எந்தத் தினத்தில் மக்கள் தன்னம்பிக்கையை இழந்தார்களோ அன்றிருந்தே நம் க்ஷீண திசையும் ஆரம்பித்திருப்பதைக் காணலாம்.

மனம்போல மாங்கல்யம்

சிரத்தையையும் தன்னம்பிக்கையையும் மக்களுக்குப் போதிப்பதே என் வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டிருக்கிறேன். நான் மறுபடியும் கூறுகிறேன், கேளுங்கள்

இத்தன்னம்பிக்கை மக்களுக்குள் இயங்கும் மகத்தான சக்தி களில் ஒன்று. தன்னம்பிக்கையை நீங்கள் அனைவரும் பெறுங்கள்! சமுத்திரத்திலிருந்து ஒரு சிறிய குமிழியும் தோன்றலாம்; ஒரு மலை போன்ற பெரிய அலையும் தோன்ற லாம். ஆனால், இவ்விரண்டிற்கும் பின்னால் எல்லையற்ற, அளக்கவொண்ணாத அதே பெரிய சமுத்திரம் இருக்கிறது என்பதை உணருங்கள்! அத்தகைய எல்லையற்ற மகத்தான சக்தி எனக்கும் உங்களுக்கும் அடிப்படையாக இருக்கிறது. அந்தப் பரந்த எல்லையற்ற சக்தி வாய்ந்த தெய்விகச் சமுத் திரம் அனைவர் பின்னும் இருக்கிறது. ஆதலால், சகோதரர் களே, உயிர் கொடுக்கக்கூடிய இந்த உயர்ந்த சீரிய கொள் கையை உங்கள் குழந்தைகளுக்குப் பிறவியிலிருந்தே ஊட்டி வளர்ப்பீர்களாக!

# 4. ஆசிரியரும் மாணாக்கரும்

**குருகுல முறை**

குருகுல முறையில் கல்வி பயிற்றுவதே உயர்ந்த முறையென்பது எனது அபிப்பிராயம். கல்வி பயிற்றுவதில் ஆசிரியன் சொந்த வாழ்க்கை மிக முக்கியமானது. சுடர்விட்டெரியும் சோதி போன்ற தூய ஒழுக்கமுடைய ஆசிரியருடன் ஒருவன் தன் குழந்தைப் பிராயத்திலிருந்து வசித்தல் வேண்டும். அவ்வாசிரியர் உயரிய கல்விப் பயிற்சிக்கு உயிருள்ள உயர்ந்ததோர் உதாரணமாக விளங்க வேண்டும். நம் தேசத்தில் கல்வி பயிற்றும் வேலை எப்போதும் தியாகிகள் வசமே இருந்து வந்திருக்கிறது. இப்பணி மறுபடியும் தியாக புருஷர்களிடமே ஒப்படைக்கப்பட வேண்டும்.

**பழங்காலக் கல்விமுறை**

நம் நாட்டில் பழங்காலத்திலிருந்த கல்விமுறை தற்கால முறையிலிருந்து மிகவும் மாறுபட்டதாக இருந்தது. மாணவர்கள் யாதொரு சம்பளமும் கொடுக்கவேண்டியிருக்கவில்லை. கல்வியறிவு மிகவும் புனிதமானது; எனவே, அதை எவரும் விலைக்குத் தரலாகா தென்று கருதப்பட்டது. கல்வி யாதொரு விலையுமின்றி இலவசமாக அளிக்கப்பட வேண்டுமென்று அக்காலத்தில் எண்ணினார்கள். ஆசிரியர்கள் யாதொரு கட்டணமுமின்றி மாணாக்கர்களைச் சேர்த்துக் கொண்டார்கள், அது மாத்திரமல்லாமல், பலர் அவர்களுக்கு உணவும் உடையும் அளித்தனர். இவ்வாசிரியர்களின் சம்ரட்சணைக்காகத் தனவந்தர் பலர் மானியங்கள் விட்டனர். இவற்றின் உதவியைக் கொண்டு அவர்கள் தங்கள் மாணாக்கர்களைக் காப்பாற்றினார்கள் பழங்காலத்தில் மாணாக்கனாக விரும்பியவன், குருவுக்காக விறகு பொறுக்கிக்

கொடுத்தல் முதலிய சேவைகளேச் செய்து, குருவை நாடுவான். குருவும் அவனுடைய யோக்கியாம்சத்தை யறிந்து அவனுக்கு வேதங்களே உபதேசிப்பார். மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றிலும் அவன் அடக்கத்துடன் இருக்க வேண்டும் என்ற விரதத்தின் அறிகுறியாக முஞ்சை என்ற ஒருவிதப் புல்லின் மூன்று புரியாலான முப்புரி நூலே அவன் மார்பில் அவர் இடுவார்.

ஆசிரியர்களும் மாணுக்கர்களும் சில குணுதிசயங்களே உடையவர்களா யிருத்தல் அவசியம். அறிவு வளர்ச்சியில் உண்மையான அவாவும், விடா முயற்சியும், தூய்மையுமே மாணுக்கனுக்குரிய இலக்கணங்களில் முக்கியமானவை. மனே வாக்குக் காயங்களில் பூரணத் தூய்மை இன்றியமையாததாகும். கருதிய பொருள் கைகூடும் என்ற ஆன்ரூர் மொழியொன் றுண்டு. அதற்கேற்ப, நமக்கும் கல்வி பெறுவதில் நிறைந்த ஆர்வம் இருக்க வேண்டும். நாம் முழு மனத்துடன் விரும்பினு லொழிய ஒரு பொருளும் நமக்குக் கிடைக்காது. அதற்காக இடை விடாத முயற்சி செய்ய வேண்டும். நம் மனத்திலிருக்கும் தாழ்ந்த குணங்களே யொழிக்க ஓயாத போர் செய்ய வேண்டும். தாழ்ந்த தன்மையை அகற்றி, உயர்ந்த தன்மை வெற்றி பெறும் வரை இந்தப் போரைத் தொடர்ந்து நடத்த வேண்டும். இவ்வித ஊக்கத்துடன் முயற்சி செய்யும் மாணுக்கன் நிச்சயமாக வெற்றி பெறுவான் என்பதில் ஐயமில்லே.

**மாணவன் இலக்கணம்**

ஆசிரியனே, மறைகளின் மெய்ப்பொருளே உணர்ந்தவணு யிருத்தல் அவசியம். எல்லோரும் தம் மதத்திலுள்ள வேத நூல்களேப் படிக்கிருர்கள். ஆனுல், இவர்கள் பெரும்பாலும் அந்த நூல்களிலுள்ள இலக்கண இலக்கிய நயங்களேப்

பாராட்டுகிருர்கள். சொற்சுவை கற்பித்துக் கொண்டு அதனே விஸ்தாரப்படுத்துவதிலேயே திருப்தி பெறுகிறவர்கட்குப் பொருட்சுவை எவ்வாறு பரிமளிக்கும்? வேதத்தின் மெய்ப்பொருளே அறிவது தான் உண்மை ஆசிரியனின் இலக்கணம்.

ஆசிரியரின் இலக்கணம்

ஆசிரியனின் இரண்டாவது குணம், அவன் மாசற்றவனுக இருத்தல் வேண்டும் என்பது. "ஆசிரியனுடைய ஒழுக்கத்தையும் நடத்தையையும் பற்றி நாம் பார்ப்பானேன்? அவன் சொல்வது சரியென்று நாம் பார்த்தால் போதாதா?" என்று கேட்பவர் பலருண்டு. இது சரியன்று. சத்தியத்தைத் தான் உணரவும் அதை மற்றவர்கட்கு போதிக்கவும், இருதய பூர்வமான பரிசுத்தம் அத்தியாவசியம். அவன் முற்றிலும் பரிசுத்தனு யிருந்தாலொழிய, அவன் வார்த்தைக்கு மதிப்பும் பலனும் இரா. ஆசிரியனுயிருப்பவன் மாணுக்கனது புத்தியை அபிவிருத்தி செய்வது மட்டுமல்லாமல், தன்னுடைய சக்தியில் கொஞ்சம் மாணுக்கனுக்குக் கொடுத்து உதவுகிறவனு யிருக்க வேண்டும். தன் உயர்ந்த தன்மையில் ஓர் அம்சத்தை மாணுக்கனுக்கு ஆசிரியன் அளிக்கிருன். ஆதலால் ஆசிரியன் பூரண தூய்மையுடையவனுயிருத்தல் அவசியம்.

மூன்ருவதாக, ஆசிரியன் எவ்விதமான பயனேயும் எதிர்பாராமல் போதிக்க வேண்டும். பணத்துக்காகவோ பெயருக்காகவோ அல்லது புகழுக்காகவோ அவன் கற்பிக்காமல், மாணுக்கன்பேரிலும் மானிட வர்க்கத்தின் பேரிலும் உள்ள அன்பின் காரணமாகவே அவன் தன் பணியை ஆற்ற வேண்டும். அன்பின் மூலம் தான் ஆன்மிக உணர்ச்சியை ஒருவருக்கொருவர் அளிக்க முடியும். பொருள், புகழ்—இவற்றில் ஆசையிருக்குமாயின், இவ்வன்பு உண்டாகாது.

பெற்ருேரிடத்துப் பிள்ளைகள் எவ்விதம் ஒழுக வேண்டுமோ அவ்விதமே பிள்ளைகள் ஆசிரியர்களிடத்தில் ஒழுக வேண்டும். ஆசிரியரிடத்திலும் விசுவாசம் ஆசிரியரிடத்தில் மும், வினயமும், பக்தியும் இல்லாவிடில் நம்பிக்கை நம் மனத்தில் அறிவு வளர்ச்சி உண்டாகாது. இம் முறையைப் பின்பற்ருத தேசங்களில் ஆசிரியன் சாமானிய உபாத்தியாயனுகவேயிருக்கிருன். ஆசிரியன் தன் சம்பளத்திலேயே கருத்தை வைத்திருக்கிருன். மாணுக்கனும் ஏதோ வெறும் விஷயங்களைத் தெரிந்துகொள்ளும் நோக்கத்துடன் வருகிருன். பாடம் முடிந்ததும் இருவரும் அவரவர் வழியே செல்லுகின்றனர். ஆனுல், தனி மனிதனிடம் அதிக நம்பிக்கை வைப்பது பலவீனத்தையும் மூட நம்பிக்கையையும் சில சமயங்களில் உண்டாக்கலாம் என்பதை நாம் மறக்கலாகாது. ஆசிரியரைக் கடவுள்போல் வழிபடுங்கள்; ஆனுல், அவரைக் குருட்டுத் தனமாய் நம்பாதீர்கள்! அவரைப் பூரண அன்புடன் நேசியுங்கள்; ஆனுல் உங்கள் மனத்தின் சுயேச்சையைப் பலி கொடுக்காதீர்கள்!

ஆசிரியர்கள், மாணுக்கர்களின் சுபாவத்தை யறிந்து கற்பிப்பதில் தங்கள் சக்தி முழுவதையும் செலுத்த வேண்டும். உண்மையான அன்பும் அனுதாபம் மாணவரிடம் மும்இன்றிச் சரியாகக் கற்பிக்க முடியாது. அனுதாபம் எவரிடம் இருக்கும் நம்பிக்கையைக் குலைக்க முயலாதீர்கள்; உங்களால் முடியுமானுல் அவனுக்கு உயர்ந்த எண்ணங்களைக் கொடுக்க முயலுங்கள்! ஆனுல், அஃதின்றி அவனுடைய பற்றுக்கோடுகளைக் கெடுக்க வேண்டாம். தன்னிடம் பயில வரும் மாணவர் ஆயிரம் பேர் இருப்பினும், ஒரு நிமிடத்தில் அவர்கள் தன்மையை அறிந்து அவர்கள் போலத் தன்னையும் ஆக்கிக் கொள்ளுகிறவன்தான் உண்மை ஆசிரியனுவான்.

மாணுக்கனுடைய மனத்தின் நிலைமைக்குத் தன் மனத்தையும் இழுத்துக் கொண்டுவந்து தன் மனம் முழுவதையும் அவன் மனத்தின்பாற் செலுத்தி, அவன் பார்க்கிற மாதிரி விஷயங்களைப் பார்த்து, அவன் சிரமங்களை அறிந்து, அவற்றை நீக்கி, அவன் மனத்தில் அறிவு வளர்ச்சியை உண்டாக்குபவனே உண்மை ஆசிரியனுவான். உண்மையில் அத்தகைய ஆசிரியர்களால்தான் கல்வி பயிற்றுவிக்க முடியும்.



## 5. கல்வியும் ஒழுக்கமும்

**நினைவின் சக்தி**

ஒரு மனிதனுடைய ஒழுக்கம் அல்லது தன்மை எனப்படுவது, அவனுடைய மனப்போக்குகள் அனைத்தும் சேர்ந்து உண்டானது, அதனை அவனுடைய மனோவிருத்திகளின் தொகுதி எனச் சொல்லலாம். அவன் இன்பமும் துன்பமும் அனுபவிக்கும் காலை, அவை அவன் மனத்தில் பலவிதமான உணர்ச்சிகளை உண்டாக்கிச் செல்லுகின்றன. இவ்வுணர்ச்சித் தொகுதியின் பயனே அவனுடைய குணம் அல்லது தன்மையாகிறது, நம் எண்ணங்களே நம் தன்மையை உண்டாக்கி யிருக்கின்றன. இரும்பின் மேல் சம்மட்டி அடிக்கும் ஒவ்வொர் அடியும் அதன் உருவத்தைத் தீர்மானம் செய்வதுபோல் நம் ஒவ்வோர் எண்ணமும் நம் தன்மையைத் தீர்மானம் செய்கிறது. வார்த்தைகள் அவ்வளவு முக்கியமானவை யல்ல. எண்ணங்களே மிக முக்கிய மானவை. அவற்றிற்கு ஆழ்ந்த சக்தியுண்டு. நெடுங் காலத்துக்குப் பின் நேரக்கூடியதை அவை தாம் தீர்மானம் செய்கின்றன. ஆதலால், நாம் நினைக்கும் நினைவுகளைப் பற்றி அதிஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

**இன்ப துன்பங்களின் பலன்**

நமது மனத்தின் தன்மையை உண்டாக்குவதில் இன்பத்துக்கும் துன்பத்துக்கும் சமபங்கிருக்கிறது. சில சந்தர்ப்பங்களில் இன்பத்தைக் காட்டிலும் துன்பமே அதிக நன்மையைச் செய்திருப்பதாகப் புலப்படும். பூவுலகிலே தோன்றியுள்ள பெரியோருடைய சரித்திரங்களை ஆராய்ந்து பார்ப்போமாயின், பெரும்பாலும்

அவர்களுடைய ஆன்மசக்தியை வெளியே பிரகாசிக்கச் செய் தவை, இன்பத்தைக் காட்டிலும் துன்பமே யெனவும், செல் வத்தைக் காட்டிலும் வறுமையே யெனவும், புகழைக் காட்டிலும் இகழ்வே யெனவும் நாம் அறிந்துகொள்ளு வோம். செல்வத்திலேயே பிறந்து வளர்ந்து, சுகத்தையே அனுபவித்துக் கொண்டிருந்து துக்கத்தை ஒரு சிறிதும் அறியாம லிருந்தவர்களில் எவர்தாம் உயர்ந்த வாழ்வைப் பெற்றிருக்கிறார்கள்! மனம் துக்க சாகரத்தில் ஆழ்ந்து, சுற்றிலும் கஷ்டங்கள் என்ற புயல்காற்று அடித்துக் கொண்டிருக்க, உள்ளத்திலிருந்த நம்பிக்கையும் தைரிய மும் அகன்று, வாழ்க்கையே அந்தகார மயமாய்த் தோன் றும்; இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் தான் ஆன்ம ஒளி பிரகாசிக்கிறது.

மனமாகிய குளத்தில் கருமமாகிய கல் விழ, அதனால் எழுந்த சிற்றலைகள் முற்றிலும் அழிந்து போகாமல், தாம் திரும்பி வருவதற்கு அறிகுறியாகிய அடையாளங்களை விட்டுச் செல்லுகின் றன. நாம் செய்கின்ற ஒவ்வொரு செய் கையும், சரீரத்தின் ஒவ்வோர் அசைவும், நினைக்கிற ஒவ்வொரு நினைவும் மனத்தில் அவற்றுக் கேற்ற சம்ஸ்காரங்களைப் பதியச் செய்கின்றன. இவை புறத்தே தோன்றுவதற்குத் தக்க வழியில்லாம லிருப்பினும் மனத்தில் அடங்கியிருந்து தொழில் செய்யும் இயல்பின; நாம் அதற்குமுன் செய்துகொண்டிருக்கும் மனோவிருத்திகள் அல்லது சம்ஸ்காரங்களைப் பொறுத்தவை. ஒவ்வொரு மனிதனுடைய ஒழுக்கமும் தன்மையும் அவனவன் செய்து கொண்ட சம்ஸ்காரங்களின் பயனாக ஏற்பட்டவை. நல்ல சம்ஸ்காரங்கள் நிறைந்திருப்பவன் நல்லவனாவான். தீய சம்ஸ்காரங்கள் கூடியிருப்பவன் தீயவனாவான். ஒருவன் தீய வார்த்தைகளைப் பேசி, தீய எண்ணங்களை எண்ணி, தீய

**கருமத்தின் பயன்**

செயல்களையே புரிந்தால் அவனுடைய உள்ளம் தீய சம்ஸ்காரங்களால் நிறைந்திருக்கும். இவ்விதம் உண்டாகிய தீய சம்ஸ்காரங்கள் அவனை அறியாமலே, அவனது நினைவையும் தொழிலையும் தம் வயப்படுத்தும் ஆற்றலுடையன. இந்தக் கெட்ட மனோ விருத்திகள் இடைவிடாமல் தொழில் செய்து கொண்டிருக்கின்றன. இத்தீய சம்ஸ்காரங்களின் தொகுதியினாலேயே அவன் உந்தப்பட்டு, செலுத்தும் வழி செல்லுகிற யந்திரம்போல, அவன் தீய வழிகளில் செலுத்தப்படுவான்.

**ஒழுக்கத்தின் உயர்வு**

இங்ஙனமே ஒருவன் நல்லெண்ணங்களை எண்ணி நற்கருமமே புரிவானாயின், அவன் மனத்தில் நல்ல சுபாவமும் நல்ல சம்ஸ்காரமும் உண்டாகும். இவற்றின் பயனாக அவன் தன்னையும் அறியாமல் நற்கருமங்களில் ஈடுபடுவான். அவன் நெடுங்காலமாக நற்கருமமே செய்து நல்லெண்ணங்களையே மனத்தில் கொண்டிருப்பானானால், அவன் எப்பொழுதும் எந்நிலையிலும் நல்ல காரியங்களையே செய்வான். அவன் தீமை செய்ய முயன்றாலும் அவன் உள்ளத்தில் அமைந்திருக்கும் நல்ல சமஸ்காரங்கள் அவனைத் தீய வழியில் செல்லவிடா. அவன் சதா நல்லுணர்ச்சியுடனேயே இருப்பான். இந்த நிலைமையிலுள்ள மனிதனை நல்ல சுபாவத்தில் நிலைபெற்றவன் என்று சொல்லலாம். ஒருவனுடைய உண்மைத் தன்மையை ஆராய வேண்டின் அவனது பெருஞ் செயல்களைப் பார்க்க வேண்டாம்; அவன் தன் சாதாரண காரியங்களை எங்ஙனம் செய்கிறான் என்பதைக் கவனிக்க வேண்டும். அவைதாம் ஒருவனுடைய உண்மைத்தன்மையை வெளிக்காட்டும். சில சந்தர்ப்பங்களில் கயவரும் கீர்த்தி பெறுவதுண்டு. எந்த நிலைமையிலும் பெருந்தன்மையுடன் நடப்பவனே உண்மையிற் பெரியோனாவான்.

மனத்திலே இத்தகைய உணர்ச்சிகள் பல ஒன்று கூடும் போது அவை ஒரு பழக்கமாகின்றன. 'பழக்கம் இரண்டாம் இயற்கை' என்று சாதாரணமாய்ச் சொல்லுவதுண்டு. முதல் இயற்கையும் அதுதான், மனிதனுடைய முழு வியற்கையும் அதுவேயாம். நாம் தற்காலத்தில் இருக்கும் நிலை எவ்வித மிருப்பினும் இது பழக்கத்தின் பயனாக ஏற்பட்டது. இவ்வுண்மை நமக்கு ஆறுதல் அளிக்கிறது. ஏனெனில் நம் நிலை பழக்கத்தின் பயனாக விருப்பின், நம் நிலையை நாம் எப்பொழுதும் திருத்தியமைத்துக்கொள்ள முடியும் என்று ஏற்படுகிறதல்வா? தீய பழக்கங்களை மாற்ற ஒரே மருந்துண்டு. அவற்றுக்கு எதிரான நல்ல பழக்கங்கள் தாம் அவ்வருமருந்தாகும். துர்ப்பழக்கங்களை நல்ல பழக்கங்களால் மாற்ற இயலும். இடைவிடாது நற்காரியங்களைச் செய்; பரிசுத்தமான எண்ணங்களை நினை. கெட்ட எண்ணங்களை அகற்ற அதுதான் ஒரே வழியாகும். எந்த மனிதனையும் திருத்த முடியாதவனெனச் சொல்லாதே! ஏனெனில் அவன் பழக்கத்தினால் கட்டுப்பட்டவனே யாகிறான். புதிய நல்ல பழக்கங்களால் அவற்றைத் தடுக்க இயலும். மீண்டும் மீண்டும் செய்த நற்பழக்கங்களே உயர்ந்த ஒழுக்கமாகும். பழக்கங்களால் மாத்திரமே மனிதனுடைய ஒழுக்கத்தடையைச் சீர்படுத்தலாம்.

மனிதன் பழக்கத்தின் கட்டுக்கு ஆளானவன்

நம் கேடுகள் அனைத்துக்கும் காரணம் நம் உள்ளத்திலேயே இருக்கிறது. அதற்காகத் தேவர்களையோ கடவுளையோ குறைசொல்ல வேண்டாம் அல்லது அதை மாற்ற முடியாதெனச் சலிப்பும், சோர்வும் கொள்ள வேண்டாம். வேறு ஒருவர் வந்து நமக்கு உதவி செய்யாதவரையில் நாம் இந்நிலையிலிருந்து தப்ப முடியாதென நினைக்கவும் வேண்டாம்.

நம்மை ஆக்குவது நாமே

நாம் பட்டுப்பூச்சியைப்போல் இருக்கிறோம். பட்டுப் பூச்சி தன் உடலிலிருந்து உண்டாகும் வஸ்துவால் கூட்டைக் கட்டித் தன்னை அதற்குள் சிறை செய்து கொள்வது போல், நாம் செய்தகாரியத்தின் பயனாகவும் பழக்கத்தின் பயனாகவுமே நம்மை நாம்பந்தப்படுத்திக் கொள்ளுகிறோம். அதற்குப் பிறகு நம் அறியாமையின் காரணமாக, நாம் பந்தப்பட்டிருப்பதாக நினைத்து அழுகிறோம்; உதவிக்காகக் கூக்குரலிடுகிறோம். ஆனால், வெளியிலிருந்து நமக்கு உதவி வருவதே இல்லை. நம்முள் இருந்துதான் நமக்கு உதவி வருகிறது. உலகிலுள்ள எல்லா தெய்வங்களிடமும் சென்று முறையிட்டுப் பாருங்கள்! நான் பல வருஷங்கள் இவ்விதம் புலம்பினேன். கடைசியில் எனக்கு உதவி கிடைத்தது. ஆனால், இவ்வுதவி என் உள்ளத்தினின்றுதான் வந்தது. நான் தவறாகச் செய்துகொண்ட என் கட்டுக்களை நானேதான் அறுத்து, அவற்றினின்றும் என்னை விடுவித்துக் கொள்ளவேண்டி யிருந்தது. என்னுடைய வாழ்க்கையில் பல தவறுகளை நான் செய்திருக்கிறேன். அத்தவறுகளைச் செய்யாமல் நான் எனது இன்றைய நிலைமையை அடைந்திருக்க முடியாது. நீங்கள் வீட்டுக்குச் சென்று, வேண்டுமென்றே தவறுகளைச் செய்ய வேண்டு மென்று நான் சொல்லுவதாக நீங்கள் அர்த்தம் செய்துகொள்ளக் கூடாது அவ்விதமாக என்னைத் தப்பர்த்தம் செய்துகொள்ள வேண்டாம். சென்றதைக் குறித்து வருந்தி மனச் சோர்வடைய வேண்டாமென்பதே நான் அறிவுறுத்துவது.

நாம் தவறுகள் பல செய்கிறோம்; அவற்றுக்குக் காரணம் நமது பலவீனம். பலவீனத்துக்குக் காரணம் நம் அறியாமையேயாகும். நம்மை யார் அறியாதவர்களாகச் செய்கிறார்கள்? நாமே நம் கண்களை நம் கைகளாலேயே மூடிக் கொண்டு இருட்டாயிருக்கிறதென்று முறையிடுகிறோம். மூடி

யிருக்கும் கையை எடுத்துவிடுங்கள்; உடனே வெளிச்சம் தோன்றும். மனித ஆன்மாவின் சுயம்பிரகாச சக்தியாகிய ஒளி நம்மை எப்பொழுதும் சூழ்ந்திருக்கிறது. தற்கால சாஸ்திரங்களைப் படித்த அறிவாளிகள் என்ன சொல்லுகிறார்கள் என்று நீங்கள் கேட்டதில்லையா? உயிர்களின் *பரிணாம வளர்ச்சியின் காரணம் என்ன? இச்சையே பரிணாமத்தின் அடிப்படையான காரணம் என்று அவர்கள் உரைக்கிறார்கள். ஒரு பிராணி ஒரு காரியத்தைச் செய்ய விரும்புகிறது. ஆனால், அதன் சுற்றுச் சார்புகள் அதற்கு அனுகூலமா யிருப்பதில்லை. எனவே, அதன் சுற்றுச் சார்புக்கேற்ற ஓர் உடம்பை அது உண்டாக்கிக் கொள்கிறது. யார் அவ்வுடம்பை உண்டாக்குகிறார்கள்? அப்பிராணியே தான்; அதன் சித்தம் அதை உண்டாக்குகிறது. உங்கள் சித்தத்தைப் பயன்படுத்துங்கள்; அஃது உங்களை உயர்ந்த நிலைமைக்குக் கொண்டுபோகும். சித்தம் சர்வ சக்தி வாய்ந்ததாக இருந்தால், "நாம் ஏன் சர்வ சக்தி வாய்ந்தவர்களாயில்லை?" என்று நீங்கள் கேட்கலாம்.

**தவறுகளுக்குக் காரணம் பலவீனம்**

இக் கேள்வி கேட்கும்போது, நீங்கள் உங்கள் சிறு அகங்காரத்தை மட்டிலுமே நினைக்கிறீர்கள். ஒரு பரமாணுவிலிருந்து ஓர் உயர்ந்த மனிதனாக நீங்கள் வளர்ந்ததைத் திரும்பிப் பாருங்கள். இதையெல்லாம் செய்தது யார்? உங்கள் சித்தம் தான். இவ்வளவு உயர்வாக வளரச் செய்த உங்கள் சித்தம் உங்களை இன்னும் உயரக் கொண்டு போகும்; உங்களுக்கு வேண்டியதெல்லாம் வாழ்க்கையில் உயர்ந்த ஒழுக்கமும், சித்தத்தில் பலமும் தான்.

*Evolution

நீங்கள் உங்கள் வீட்டுக்குச் சென்று தலைக்கு முக்காடிட்டு நீங்கள் செய்த தவறுதல்களுக்காக ஆயுட்கால முழுவதும் அழுதாலும், அஃது உங்களுக்கு உதவாது.
சீரிய ஒழுக்கமே அஃது உங்களை இன்னும் அதிகமாகப்
தேவை பலவீனப்படுத்தும். இதுவரையிலும் பல்
லாயிரக் கணக்கான வருஷங்களாக அந்த
காரம் நிறைந்திருந்தால் நீங்கள் வந்து அழுதவுடனே அவ்வந்தகாரம் நீங்குமா? தீக்குச்சியை உரைத்த அளவிலே வெளிச்சம் தோன்றுகிறது, அதைப்போலவே, 'நான் கெட்ட செய்கைகள் செய்திருக்கிறேன். தவறுகள் செய்திருக்கிறேன்' என்று வாழ்க்கை முழுதும் அழுது புலம்பினாலும் யாது பயன்? நாம் செய்த குற்றங்களை நமக்குச் சொல்ல எந்தச் சாமியோ பூதமோ தேவையில்லை. வெளிச்சத்தைக் கொண்டு வந்தால், இருள் உடனே மறையும். உயர்ந்த ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து உங்களுக்குள் மறைந்திருக்கும் உள்ளொளியான சச்சிதானந்தப் பரம்பொருளை வெளிப்படுத்துங்கள்; மற்றவர்களும் அதை வெளிப்படுத்தும்படி உதவுங்கள். அதுவே நமக்கு இப்போது தேவையானது.

# 6. மதக் கல்வி

எல்லாக் கல்வி முறைகளிலும் மதக் கல்வி மிக முக்கிய மான அம்சமாய் இருக்க வேண்டும். மதக் கல்வி என்பதில் என்னுடைய மதத்தைப் பற்றிய கல்வியையோ அல்லது எந்தத் தனிப்பட்ட ஒருவருடைய மதத்தைப் பற்றிய கல்வி யையோ அல்லது ஒரு கூட்டத்தினருடைய மதத்தைப் பற்றிய கல்வியையோ நான் குறிப்பிடவில்லை. மனித வாழ்க்கைக்கு என்றும் அடிப்படையாக இருந்து வரும் நிலையான ஆன்ம இயற்கை நியதிகளை மக்கள் அறியுமாறு எடுத்துச் சொல்ல வேண்டுமென்பதே என் கருத்து. முத லில் ஆன்ம நெறியில் சிறந்து விளங்கியிருக்கும் நாயன் மார்கள், ஆழ்வாராதிகள் முதலிய மகா புருஷர்களின் வாழ்க் கைகள் மிக பக்தியுடன் கொண்டாடப்படும்படி செய்ய வேண்டும். என்றும் அழியாத நிலையான ஆன்ம உண்மை களைத் தங்கள் வாழ்க்கையில் அனுஷ்டித்த அவதார புருஷர் களான இராமர், கிருஷ்ணர், மகாவீரர் (அனுமார்), ராம கிருஷ்ண தேவர் முதலியோர் மக்களுக்குத் தங்கள் வாழ்க் கையில் பின்பற்றும் லட்சியங்களாக விளங்கும்படி செய்ய வேண்டும்.

பிருந்தாவனக் கிருஷ்ணனை தற்சமயம் கொஞ்சம் தள்ளி வைப்போம். ஒரு மகா யுத்தத்தின் மத்தியில் அஞ்சாது நின்று சிங்கம் போல் முழங்கி கீதையை உபதேசித்து, அர்ஜுனனுடைய சோர்வை நீக்கி, ஆண்மையை யூட்டிய அந்தக் கிருஷ்ணனுடைய வழிபாட்டையே நாம் இப் போது பரப்ப வேண்டும். அதனோடு சக்தி உபாசனையும் நாள் தோறும் செய்தல் வேண்டும். வீரத்தையும்

**ஆண்மை யூட்டும் வழிபாடு**

ஆண்மையையும் உண்டாக்கக்கூடிய லட்சியங்களே நமக்கு இப்பொழுது வேண்டுவன. ஒப்பற்ற ஆண்மையுடனும், அளவற்ற வேகத்துடனும் தியாகத்தை கவசமாக ஏற்று, ஞானத்தைக் கத்தியாகக் கொண்டு, உண்மைக்காக உழைத்து, அம்முயற்சியில், அவசியமானால், தங்கள் உயிரையும் தத்தம் செய்யக்கூடிய வீரம் செறிந்த ஆண்தகைகளே நமக்கு இப்பொழுது இலட்சியமாகத் தேவை; போர் முனையில் எதற்கும் அஞ்சாது போர் புரியத்தக்க உணர்ச்சிதான் நமக்கு இப்பொழுது அவசியம்.

**சேவா லட்சியம்**

அந்த ராம பக்தரான மகா வீரரையே (அனுமார்) உங்கள் இலட்சிய மாக்கிக் கொள்ளுங்கள். ராமர் ஆணையால் அவர் கடலையும் கடந்தார். அவர் உடலை உருக்கவும் சாவை எதிர்க்கவும் ஒரு சிறிதும் அஞ்சவில்லை. அவர் சிறந்த அறிவாளி. புலன்களனைத்தும் அவர் வயப்பட்டிருந்தன அவர் வாழ்க்கை முழுதும் ராம சேவையில் கழிக்கப்பட்டது. சேவைக்கு இலட்சியமாக உள்ள இவரை ஆதாரமாக வைத்துக்கொண்டு உங்கள் வாழ்க்கையை நடத்துங்கள். சேவை என்ற இலட்சியத்தை மேற்கொண்டால் மற்ற அருங்குணங்களனைத்தும் தாமே நம் வாழ்க்கையில் பொருந்தும். குருவின் உபதேசங்களை முற்றிலும் ஏற்று அவற்றின்படி ஒழுகுதலும் பிரமசரியத்தை வழுவாது கடைபிடித்தலுமே எவ் விஷயத்திலும் வெற்றி பெறுதற்காக இரகசியமாகும். அனுமார், சேவைக்கு இலட்சியமாக இருப்பதுபோல், ஆண்மைக்கும் வீரத்திற்கும் எடுத்துக் காட்டாக இருக்கிறார். உலகம் அவர் வீரத்தைக் கண்டு பிரமிக்கிறது. ராம சேவையில் தம்மை முற்றிலும் தியாகம் செய்வதில் அவருக்குச் சிறிதும் கவலையில்லை. வேறு எவ் விஷயத்திலும் அவருக்கு அக்கரையில்லை. இராகவனுடைய உத்தரவைச் சிரமேற்றாங்கி அதன்படி

நடப்பதே அவர் வாழ்க்கையில் கொண்டிருந்த ஒரே விரதம். அத்தகைய பூரண பக்தியே இப்பொழுது நமக்குத் தேவை.

கிருஷ்ணன் கோபிகளுடன் விளையாடிய தெய்வீக லீலையை ஆராதிப்பது தற்காலத்தில் நமக்கு நல்ல தன்று. வெறும் புல்லாங்குழலை வாசித்து நாட்டைப் புனருத்தாரணம் செய்ய முடியாது. மிருதங்கத்தை யும் ஜால்ராவையும் அடித்துக்கொண்டு பாடுவதும் ஆடுவதும் நம்மைத் தாழ்த்தி விட்டன. வீரமுரசு கொட்டுங்கள் பரமனை நினைத்துப் பாடுவதும் ஆடுவதும் மிக உயர்ந்த சாதனைகள் என்பதில் ஐயமில்லை. ஆனால் அவற்றுக்கு இன்றியமையாத பூரண பரிசுத்தமின்றி நாம் இச்சாதனைகளிலீடுபட்டது நம்மைத்தாழ்த்தித் தமோ குணத்தில் தள்ளி யிருக்கிறது. நம் நாட்டில் பேரிகைகள் செய்வதில்லையா? யுத்த பேரிகைகள் இந்தியாவில் கிடைப்பதில்லையா? இவற்றின் ஆழ்ந்த முழக்கங்களை நம் இளைஞர்கள் கேட்கும்படி செய்யுங்கள். மிருதுவான சப்தங்களை யும் சங்கீதங்களையும் இளமையிலிருந்து கேட்டு நம் மக்கள் ஆண்மையை இழந்துவிட்டனர். மறுபடியும் வெற்றி முரசைக் கொட்டுங்கள்! பேரிகைகளை அடியுங்கள்! அவை உண்டாக்கும் ஆழ்ந்த முழக்கங்களுடன் "மகாவீர், மகாவீர்" என்ற சப்தம் முழங்க, உலகம் முழுதும் "ஹரஹர மஹா தேவ்" என்றநாதம்கேட்கட்டும். பெண்மையை உண்டாக்கக் கூடிய மிருதுவான ஸ்வரங்களைக் கொஞ்சக் காலத்துக்கு நிறுத்தி வைப்போமாக. வீரத்தை உண்டாக்கக்கூடிய பேரிகை முழக்கத்தையே நாம் இப்பொழுது கேட்டுப் பழக வேண்டும். இடி முழக்கம் போன்ற வேதத் தொனிகளை மறுபடியும் கிளப்புவோம். அவற்றின் மூலம் நாட்டில் புத் துயிர் ஊட்ட வேண்டும். எல்லா விஷயங்களிலும் எளிமை யும் வீரமும் செறிந்த தன்மையை மறுபடியும் பிறப்பிக்க வேண்டும். இத்தகைய தன்மையை ஒருவன் பெற்ருல்

ஆயிரக்கணக்கான பேர் அவனைப் பின்பற்றுவார்கள். நம் இலட்சியத்திலிருந்து ஓர் அங்குலமும் பிறழாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். எப்பொழுதும் தைரியத்தைக் கைவிடாதீர்கள்! உண்ணும்போதும், உறங்கும்போதும், உடுத்தும் போதும் அல்லது பாடும்போதும், விளையாடும்போதும் அல்லது இன்பத்திலும் துன்பத்திலும் — எப்பொழுதும் உயர்ந்த ஆண்மையைக் கடைப்பிடியுங்கள்! எச்சமயத்தும் எந்த விதமான பலவீனமும் உங்கள் மனத்தில் புக விடாதீர்கள்! அனுமானை நினைத்துக்கொள்ளுங்கள்; பராசக்தியை மனத்தில் வையுங்கள்; உங்களுடைய பலவீனங்கள், கோழைத் தன்மை யாவும் மறையக் காண்பீர்கள்!

புதுமதம்—தன்னம்பிக்கை

கடவுளிடம் நம்பிக்கையில்லாதவனை நாஸ்திகன் என்று பழைய மதங்கள் கூறின. ஆனால் தன்னிடத்தில் நம்பிக்கை யில்லாதவனையே நாஸ்திகனென்று புது மதம் கூறுகின்றது. இந்தத் தன்னம்பிக்கை சுய நலத்தைக் கோரும் 'தனது' என்ற எண்ணம் அன்று. இந் நம்பிக்கை எல்லோரிடமும் வைக்க வேண்டிய விசுவாசத்தைக் குறிக்கும். ஏனெனில் நாமே அனைத்துமாயிருக்கிறோம் எனவே, சுய அன்பு என்பது, மனிதர் மிருகங்கள் முதலிய அனைவர் பேரிலும் அன்பு கொள்வதாகப் பொருள்படும். நாமே அனைத்துமா யிருக்கிறோம் என்ற இத்தகைய நம்பிக்கையே நமக்கு என்றும் எக்காலத்தும் பேருதவியாக இருக்கத்தக்கது. மக்களில் பெரும்பாலோர் தன்னம்பிக்கை உடையவர்களா யிருந்தால், உலகில் இப்பொழுது காணப்படும் துன்பங்களில் பெரும் பகுதி மறைந்திருக்கும். உலகிற் சிறந்த மக்களின் சரித்திரங்களை ஆராய்ந்து பார்த்தால், அவர்களிடம் இருந்த தன்னம்பிக்கையே அவர்களுக்கு ஊக்கமளித்து, அவர்களைச் சிறப்பெய்தச் செய்திருக்கிறதென்பது புலப்படும். தாங்கள் சிறந்த காரியங்களைச்

செய்யத் தோன்றியவர்கள் என்ற எண்ணத்துடனேயே வளர்ந்து அவர்கள் உண்மையிலேயே சிறந்த காரியங்களைச் சாதித்திருக்கின்றனர்.

**அளவற்ற பலம்**

அளவற்ற பலமே சமயமெனப்படும். பலத்துடன் வாழ்வதே நற் கருமம். பலவீனமே பாவம். எல்லாப் பாவங்களையும், எல்லாக் கெட்ட செய்கைகளையும் 'பலவீனம்' என்ற ஒரே வார்த்தையில் குறிப்பிட்டு விடலாம். பலவீனமே எல்லாக் கெட்ட செய்கைகளுக்கும் அடிப்படையாக விருக்கிறது. பலவீனத்தினாலேயே ஒருவன் சுயநலமுள்ளவனாகிறான். ஒரு மனிதன் மற்றொரு மனிதனை வருத்தும்படி செய்வதும் பலவீனமே. எல்லோரும் தாங்கள் யார் என்று உணரட்டும்; 'சோஹம்— நானே அனைத்தும்' என்ற எண்ணத்தை அல்லும் பகலும் அனவரதமும் நினைக்கட்டும். குழந்தைப் பருவத்திலிருந்தே 'நானே சர்வ சக்தி வாய்ந்த அந்தப் பரம புருஷனாவேன்' என்ற நினைவுடன் எல்லோரும் வளரட்டும், இவ் வெண்ணத்தை முதலில் அவர்கள் கேட்கட்டும். அதற்குமேல் அதன் உண்மையைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்கட்டும். அச்சிந்தனையிலிருந்து உலகம் இதுவரை கண்டிராத மகத்தான காரியங்கள் உண்டாவதைக் காண்பீர்கள்.

**சத்தியம்**

சத்தியத்தை தைரியமாக மேற்கொள்ளுங்கள். சத்தியம் சாசுவதமானது. சத்தியமே எல்லா ஆன்மாக்களுக்கும் அடிப்படை. சத்தியத்தை அறிய உரைகல் ஒன்று உள்ளது. எந்த ஒன்று தேசத்துக்குப் பலவீனத்தைத் தருகிறதோ, எந்த ஒன்று நமது அறிவையும் உணர்ச்சியையும் பலவீனமாக்குகிறதோ, அந்த ஒன்றை நஞ்சென ஒதுக்கித் தள்ளுங்கள்! அஃது உயிரற்றது; அஃது உண்மையாகாது. எது பலத்தைக் கொடுக்கிறதோ அதுதான் உண்மை;

உண்மை பரிசுத்தமானது. உண்மையே சர்வஞானத்தையும் அளிப்பது. ஆகையால் உண்மை யென்பது பலத்தைத் தர வேண்டும்; அறிவின் பிரகாசத்தை உண்டாக்க வேண்டும். வீரியத்தைப் பெருக்க வேண்டும். உங்கள் அரிய பழைய உபநிடதங்களை மறுபடியும் போற்றிப் படியுங்கள். ஞானமும் ஒளியும் சக்தியும் கொடுக்கக் கூடிய பல தத்துவங்கள் அவற்றில் நிறைந்திருக்கின்றன. இவ் வுயர்ந்த தத்துவங்களைக் கடைப்பிடியுங்கள்! உலகிலுள்ள உயர்ந்த உண்மைகள் உணர்வதற்கு மிகவும் எளியவை. நாம் இப்பொழுது உயிருடன் இருக்கிறோம் என்பதைப் பற்றி யாருக்காவது சந்தேகம் இருக்கிறதா? அது போலவே அவை தாமே விளக்கமா யிருப்பவை. உபநிடதங்களின் உயர்ந்த உண்மைகள் உங்கள் முன் நிற்கின்றன. அவற்றை மேற்கொள்ளுங்கள்; அவற்றை வாழ்க்கையில் கடைப்பிடித்து நடவுங்கள்! அப்பொழுது தான் இந்தியாவின் இலட்சியம் கைகூடும்.

**உடல் வலிமை**

நமது உடலின் பலக் குறைவே நம் கஷ்டங்களில் சுமார் மூன்றில் ஒரு பங்குக்குக் காரணமா யிருக்கிறது. நாம் சோம்பேறிகளாகிவிட்டோம். நம்மால் எக்காரியத்தையும் சேர்ந்து செய்ய இயலுகிறதில்லை. கிளியைப்போல் பல விஷயங்களைப்பற்றிப் பேசுகிறோம்! ஆனால் அவற்றைச் செய்வதில்லை. காரியத்தில் ஈடுபடாமல், வெறும் பேச்சுப் பேசுவதே நமக்கு வழக்கமாய்விட்டது. இதற்குக் காரணமென்ன? உடல் பலவீனம்தான். இத்தகைய உடலிலிருக்கும் வலிமையற்ற மூளையால் எதையும் சாதிக்க முடிவதில்லை. நம் இளைஞர்கள் முதலில் பலம் பெற வேண்டும். சமய உணர்ச்சி தானே பின்னால் ஏற்படும். வாலிப நண்பர்களே! நீங்கள் பலசாலிகளாகுங்கள். இதுவே நான் உங்களுக்குக் கூறும் புத்திமதி. கீதையைவிட உறுதியளிக்கும் விளையாட்டுக்களின் மூலம் நீங்கள் சுவர்க்கத்திற்கருகில்

செல்வீர்கள். உங்கள் தசைநார்களும் புயங்களும் அதிக வலிவு பெறும்போது கீதையை இன்னும் நன்றாக அறிந்து கொள்ளுவீர்கள். உங்கள் நரம்புக் குழாய்களில் இன்னும் சிறிது வலிவுள்ள இரத்தம் ஓடும்போது கிருஷ்ண பரமாத்மாவின் மகத்தான ஞானத்தையும் மகத்தான பலத்தையும் இன்னும் நன்றாக அறிந்து கொள்ளுவீர்கள் உங்கள் முதுகு வளையாமல், உங்கள் கால் தளர்வுறாமல் நீங்கள் நிமிர்ந்து நிற்கும்போதே, உங்கள் மனத்தில் ஆண்மையும் வீரமும் தோன்றும்போதே, உபநிடதங்களின் நுட்பத்தையும் ஆன்மாவின் மகிமையையும் நீங்கள் நன்குணர்வீர்கள்.

**அஞ்சாமை**

பலம், வலிமை, சக்தி இவ்வெண்ணங்களையே உபநிடதங்களின் ஒவ்வோர் ஏடும் உலகுக்கு எடுத்தோதுகின்றது என்பதை நான் உணர்வேன். இந்த ஒரே நூலில் தான் ("அபீ") 'அஞ்சாமை அஞ்சாமை' என்ற பதங்கள் உலகிலுள்ள எல்லா நூல்களைக் காட்டிலும் அதிகமாக உபயோகிக்கப்பெற்றிருக்கின்றன. வேறு எந்த மதத்தின் நூலிலும் மனிதனுக்கோ, தெய்வத்துக்கோ இப்பதம் கொடுக்கப்படவில்லை. பல்லாயிர வருஷங்களுக்கு முன் நடைபெற்ற காட்சியொன்று என் மனக்கண்முன் இப்பொழுது தோன்றுகிறது. அலெக்ஸாண்டர் சக்கரவர்த்தி உலகை வென்று நமது சிந்து நதிக்கரையில் நின்றுகொண்டிருக்கிறான். அங்கே காடுகளில் வசித்துக் கொண்டிருந்த நம் துறவிகளிலொருவரிடம் பேசிக்கொண்டிருக்கிறான். அந்த வயோதிகச் சாது உடையேதுமின்றி ஒரு கல்லின்மேல் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். சக்கரவர்த்தி அவ்வயோதிகரிடமிருந்த ஒப்பற்ற ஞானத்தைக் கண்டு ஆச்சரியமுற்றுத் தன் நாடாகிய கிரீஸ் தேசத்திற்கு வரும்படி அவரை அழைக்கிறான். அங்கு வந்தால் பொருளும் பதவியும் கொடுப்பதாக ஆசை காட்டுகிறான். ஆனால், அப்பெரியார் அந்த ஆசை வார்த்தைகளைக் கேட்டுப்

புன்முறுவல் செய்கிறார்; மன்னனுடைய வார்த்தைகளை மறுக்கிறார். சக்கரவர்த்திக்குக் கோபம் வந்துவிடுகிறது. "நீர் வராவிடில் இதோ உம்மைக் கொல்லுவேன்!" என்று பயமுறுத்துகிறான். கிழவர் கொல்லென்று சிரித்துச் சொல்லுகிறார்: "இப்பொழுது நீ பொய் சொன்ன மாதிரி எப்பொழுதும் சொன்னதேயில்லை யார் என்னைக் கொல்ல முடியும்? நான் அழிவற்ற ஆன்மா. எனக்குப் பிறப்பும் இறப்பும் ஏது?" என்கிறார். அதுவன்றோ பலம்! அதுவன்றோ ஆண்மை!

உபநிடதங்கள் சக்திச் சுரங்கங்கள்

நம்மைப் பலவீனப்படுத்த ஆயிரம் விஷயங்களிருக்கின்றன. வெகு நாட்களாக வெறுங் கதைகள் பேசிக் கொண்டிருந்து விட்டோம். ஆதலால் நண்பர்களே! உங்களுடன் பிறந்தவன், உங்களுடனேயே வளர்ந்து, உங்களுடனேயே மாளுபவன் என்ற உரிமையுடன் சொல்லுகிறேன், கேளுங்கள்: நமக்கு வேண்டியது வலிமை. வலிமை, வலிமையே என்று முக்காலும் கூறுகிறேன். உபநிடதங்கள் அவ்வலிமையின் பெருஞ் சுரங்கங்களாக இருக்கின்றன. உலக முழுவதுக்கும் அளவற்ற சக்தியூட்டுவதற்குப் போதிய வலிமை அவற்றிலிருக்கிறது. அவற்றின் மூலம் உலகமனைத்துக்கும் புத்துயிரும் புது ஊக்கமும் தரலாம். எல்லாத் தேசங்களிலும் சமூகங்களிலும் மதங்களிலும் உள்ள பலவீனர்கள், துன்புற்றவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள் ஆகிய அனைவரையும், பலங்கொண்டெழுந்து நின்று விடுதலை பெறும்படி உபநிடதங்கள் பேரிகை கொட்டிக் கூவியழைக்கின்றன. சரீர விடுதலை, மன விடுதலை, ஆன்ம விடுதலை, எனும் இவையே உபநிடதங்கள் உபதேசிக்கும் மந்திரங்களாகும்.

ஆனால், சமய நூல்களைப் பயிலல் மட்டும் நம்மை ஆன்மிக உணர்ச்சி உடையவர்களாகச் செய்யாது. உலகிலுள்ள

**அனுபூதியே ஆன்மிகவாழ்வின் அடிப்படை**

சமய நூல்கள் அனைத்தையும் நாம் பயின்றிருக்கலாம். எனினும், நமக்குக் கடவுளைப்பற்றியோ மதத்தைப் பற்றியோ ஒன்றும் தெரியாமலிருக்கலாம். நம் ஆயுள் முழுதும் நாம் பேசலாம் அல்லது வாதம் செய்யலாம். ஆனால், உண்மையை நாமே அனுபவித்து உணரும்வரை நாம் ஒன்றும் அறியாதவர்களாகத்தான் இருப்போம், ஒருவனுக்குச்சில வைத்தியப் புத்தகங்கள் மாத்திரம் கொடுத்து அவனை இரண வைத்தியன் ஆக்கிவிட முடியுமா? ஒரு தேசத்தைப் பார்க்க விரும்பும் எனக்கு அதன் படத்தைக் காண்பித்துத் திருப்தி செய்ய முடியுமா? இன்னும் பூரணமான ஞானத்தை அடைய வேண்டுமென்ற ஆர்வத்தைத்தான் இப்படம் உண்டாக்கும். அதற்குமேல் இது பயன்படாது. கோயில்களும், புத்தகங்களும் நியமங்களும் ஆன்மீக வாழ்க்கையின் முதற்படிகளே யாகும். ஆன்மீக ஞானம் விதிகளிலும் வாதங்களிலும் இல்லை. அது வாழ்க்கையைப் பொறுத்தது. அனுபூதியே ஆன்மிக வாழ்க்கையின் அடிப்படையாகும்.

**இதய உணர்ச்சியை வளருங்கள்**

உலகிலுள்ள அனைவரையும்விட நாம் அறிவிலே உயர்ந்தவர்களாக இருக்கலாம். எனினும் தெய்வ பக்திக்கும் நமக்கும் வெகுதூர மிருக்கலாம். ஆராய்ந்து பார்த்தால் புத்திக்கூர்மை மிகவும் வாய்ந்தோர் பலர் தெய்விக உணர்ச்சியே அற்றிருக்கின்றனர். மேலைநாட்டுக் கல்வி முறையில் ஒரு பெருங்குறையிருக்கிறது. அக்கல்வி பக்தியுணர்ச்சியின்றி வெறும் புத்திக்கு மாத்திரம் பயிற்சியளிக்கிறது. இதயம் இல்லாமல் வெறும் புத்திக்கூர்மை மாத்திரம் இருந்தால் அது ஒருவனை அதிகச்சுயநலமுடையவனாகத்தான் செய்யும். இதயம் ஒன்று சொல்லி, புத்தி வேறு ஒன்று உரைப்பின், இதயத்தையே பின்பற்ற வேண்டும். இதய பூர்வமான உணர்ச்சி ஒருவனை மிக உயர்ந்த நிலைக்கு

கொண்டு போகும். புத்தியால் எப்பொழுதும் அவ்வளவு உயர்ந்த நிலைக்கு அழைத்துச் செல்ல முடியாது. இதயம் புத்திக்கு மேல் சென்று தெய்வ சன்னிதானத்தை அடைய முடியும். ஆதலால், எப்பொழுதும் இதய உணர்ச்சியை நன்றாக வளருங்கள். இதயத்தின் மூலம் ஆண்டவன் பேசுகிறான்.

**மத வெறி ஒரு நோய்**

மனிதனிடம் பெண்டு பிள்ளைகள், வீடு வாசல், தேசம், மதம் போன்ற பலவித பாசங்களுண்டு. அவை அனைத்திலும் மிகத்தீவிரமானது, சமயத்தின் காரணமாக உண்டாயிருப்பதுதான். உலக சரித்திரத்திலேயே உன்னதமானதும் உயர்ந்த சாந்தி அளிக்கக்கூடியதுமான வார்த்தைகள் மத உணர்ச்சியில் முதிர்ந்த பெரியோர்களால்தான் பேசப்பட்டிருக்கின்றன. ஆனால் மிகக் கொடுமையான வசவு வார்த்தைகளுக்கும் மத உணர்ச்சி நிறைந்தவர்களே பிறப்பிடமாக இருந்திருக்கின்றனர். ஒவ்வொரு மதமும் சில விதிகளை உண்டாக்கி, அவைகளே உண்மையானவை என்று வற்புறுத்துகின்றன. சிலர் கத்தியின் முனையில் அவற்றை நம்பும்படி கட்டாயப்படுத்துகின்றனர். இங்ஙனம் செய்பவர்கள் சுபாவத்தில் கெட்ட மனிதர்களும் அல்லர். மதவெறி என்ற ஒருவித நோய் அவர்களை இவ்விதம் செய்யும்படி தூண்டுகிறது. மதத்தின் பெயரால் பல போர்கள் தொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், மதவெறி நிறைந்திருக்கும் மக்களின் மத்தியிலும், பல சமயங்களில் அவ்வப்போது சில ஞானிகள் தோன்றி, "சண்டை சச்சரவுகளை நிறுத்துங்கள்! மதங்கள் யாவும் ஒரே ஈசனை நாடுபவை" என்று ஒற்றுமை உணர்ச்சியை உபதேசித்திருக்கின்றனர்.

தற்காலமும் இத்தகைய மகான் ஒருவர் தோன்றுவதற்கு ஏற்றதாயிருந்தது. அவர் சகல சமயங்களிலும் ஒரே இறைவன் (ஒரே சக்தி) நின்று இயக்குகிறான் என்பதை அறிந்தார்.

ஒவ்வொரு மனிதனிலும் ஒவ்வொரு ஜீவ ஜந்துவிலும் அவர் ஈசனைக் கண்டார். பலவீனர்கள், தாழ்த்தப்பட்டவர்கள், ஏழைகள் என்ற இவர்கள்பால் அவர் இதயம் மிக இரங்கிக் கரைந்தது. இதனோடு அவருடைய அபார மூளை, இந்தியாவில் மட்டுமல்லாமல் உலக முழுதுமிருக்கும் மதங்களிலுள்ள அடிப்படையான ஒற்றுமையை அறிந்து, உலக முழுதும் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு சமயக்கோட்பாட்டை உண்டாக்கியது.

**ஸ்ரீராமகிருஷ்ணரின் சமதிருஷ்டி**

அத்தகைய மனிதர் ஒருவர் பிறந்தார். அவர் திருப்பாதங்களில் பல வருஷங்கள் அமர்ந்து, அவர் உபதேசங்களைப் பெறக்கூடிய பாக்கியத்தை நான் பெற்றேன். என் குருநாதரிடமிருந்து உயர்ந்த ஓர் உண்மையை நான் அறிந்தேன். உலகில் தோன்றியிருக்கும் மதங்கள் யாவும் ஒன்றுக்கொன்று விரோதமானவை யல்ல என்ற மகத்தான உண்மையை அவரிடம் உணர்ந்தேன். சாசுவதமான ஒரே சநாதன மதத்தின் பல அம்சங்களே அவை என்பதை அறிந்தேன். ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர் எவருக்கு விரோதமாகவும் ஒரு கடுமையான வார்த்தைகூடப் பேசியதில்லை. அவருடைய பேரன்பும் சமதிருஷ்டியும் எல்லாச் சமயத்தோரும் அவரைத் தங்கள் சமயத்தவர் என்று நினைக்கும்படி செய்தது. அவர் எல்லோரையும் நேசித்தார். எல்லா மதங்களையும் உண்மையென அவர் நம்பினார். மதவெறியை அகற்றுவதிலேயே அவருடைய ஆயுள் முழுவதும் கழிந்தது.

**எல்லா மதங்களையும் ஏற்க**

நாம் வேற்றுமையை அகற்றி ஒற்றுமையைக் கடைப்பிடிப்போமாக! எம் மதத்தையும் புறக்கணிக்காது ஏற்றுக்கொள்வதே நம் எண்ணமாக இருக்க வேண்டும். அவற்றைச் சகித்துக்கொள்வோம் என்பதன்று. ஏனெனில் அச்சகிப்பு, பிற மதங்கள் தாழ்ந்தவை என்ற எண்ணத்தால் ஏற்படுகிறது. நீங்கள் அவ்விதம் நினைத்தால்

அது கடவுள் பால் செய்யும் அபசாரமன்றோ? நான் உலகில் தோன்றிய மதங்களனைத்தையும் ஏற்றுக் கொள்கிறேன். அவை எல்லாவற்றையும் நான் பின்பற்றுகிறேன். அவை ஒவ்வொன்றும் எப்படி எப்படி ஆண்டவனை வணங்கு கின்றனவோ, அவ்விதமே நானும் வணங்குகின்றேன். முகமதியர்களுடன் சேர்ந்து அவர்கள் மசூதிகளுக்குச் செல் வேன். கிறிஸ்துவர்களுடன் சேர்ந்து அவர்களுடைய ஆலயங் களுக்குச் சென்று சிலுவையின்முன் முழங்காலில் மண்டி யிட்டுத்தொழுவேன். புத்தர்கள் கோயிலுக்குச் சென்று புத்த பகவானைப் போற்றி பக்தி செய்வேன். காடுகளிலும் குகை களிலும் இருந்து 'அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்தபூர்த்தியாகி' அந்தர்யாமியாய், யாவர் மனத்திலும் திகழும் அப்பேரொளியைத் தம் மனத்தில் காணச் சாதனை செய்யும் ஹிந்துக்களிடம் சேர்ந்து, தியானம் செய்வேன்.

இது மாத்திரமல்லாமல் இனி வரப்போகும் எல்லா மதங்களையும் ஏற்க என் இதயத்தைத் திறந்து வைத்திருப் பேன். ஆண்டவனுடைய அருட் புத்தகம் முடிவற்ற அருள் இதற்குள் முடிந்தா விட்டது? அல்லது விளக்கம் இன்னும் எதிர்காலத்தில் புதிய பேருண் மைகளை மானிடர் உய்யப் புலப்படுத்திக் கொண்டிருக்குமா? ஆன்மிக உண்மைகளை வெளிப்படுத்தும் இம்மதங்கள் யாவும் ஆண்டவனுடைய அதி ஆச்சரியமான புத்தகமாகும். கிறிஸ்து மத சுவிசேஷங்கள், ஹிந்துக்களின் வேதங்கள், முகம்மதியர்களின் கொரான், இன்னும் இதர மதத்தாரின் நூல்கள் என்ற இவை யாவும் அப்புத்தகத்தின் பல பக்கங்களாக இருக்கின்றன. இன்னும் அப்புத்தகத்தில் பல பக்கங்கள் வெளிவரக் காத்துக்கொண்டிருக்கின்றன. இதுவரை வந்தவை அனைத்தையும் ஏற்போமாக! இப்பொ ழுது தோன்றியிருக்கும் அருட்சுடரை அனுபவித்து இனி

வரவிருக்கும் ஞானவொளியை ஏற்க நமது இதயத்தைத் திறந்து வைத்திருப்போமாக! இதுவரை தோன்றியிருக்கும் எல்லா மகான்களுக்கும் இப்பொழுது தோன்றியிருக்கும் பெரியோர்களுக்கும் நமது வணக்கம். இனிமேல் தோன்றவிருக்கும் எல்லா மகான்களுக்கும் நமது வணக்கத்தைச் செலுத்துவோமாக!

# 7. பெண் கல்வி

ஆண், பெண் அனைவரிடத்திலும் ஒரே ஆன்மா நின்றியக்குகிறது என்று நம் சமய நூல்கள் போதிக்கின்றன.

முற்கால இந்தியாவில்

அப்படியிருந்தும் ஆண் பெண்களை நடத்துவதில் நமது நாட்டில் ஏன் இவ்வளவு வித்தியாசம் ஏற்பட்டிருக்கிறதென்பது புலப்படவில்லை. பல விதமான கொடிய விதிகளைச் செய்தும், கட்டுப்பாடுகளை ஏற்படுத்தியும் பெண்களை வெறும் பிள்ளைபெறும் யந்திரங்களாகச் செய்து விட்டனர். பிராமணர்களைத் தவிர மற்றவர்கள் வேதங்களைப் பயிலக்கூடாதென்று சட்டம் செய்த காலத்தில், பெண்களுடைய உரிமைகளும் பறிக்கப்பட்டன. வேதங்கள் எழுதப்பட்ட காலத்திலும், உபநிடதங்கள் உண்டாக்கப்பட்ட காலத்திலும், மைத்திரேயி, கார்க்கி முதலிய மாது சிரோமணிகள் கற்றுணர்ந்த ஞானிகளாகவும் முனிவர்களாகவும் விளங்கியிருப்பதைக் காண்பீர்கள். சமய நூல்கள் கற்றுணர்ந்த ஆயிரம் பேர்கள் இருந்த சபையில், கார்க்கி அஞ்சா நெஞ்சுடன் யாக்ஞவல்கரை பிரமனைப் பற்றி விவாதம் செய்யும்படி அழைக்கவில்லையா?

மாதர்க்குரிய மதிப்பை அளிப்பதன் மூலமே எல்லாத் தேசத்தாரும் சிறப்பெய்தி யிருக்கிறார்கள். எந்த நாடு பெண்களைச் சரியாக மதிக்கவில்லையோ, அந்த நாடு எப்பொழுதும் சிறப்பெய்தியதில்லை; இனி மேலும் சிறப்படையாது.

உண்மைத் தேவி வழிபாடு

உண்மையான சக்தி உபாசகன் யார் என்று உங்களுக்குத்தெரியுமா? பெண்களைப் பராசக்தியின் திருவடிவங்களெனக் கொண்டு அவர்களை வழிபடுகிறவனே உண்மைச் சக்தி உபாசகனுவான். அமெரிக்க நாட்டு

மக்கள் தங்கள் பெண்களை இவ்விதம் நினைத்துப் போற்று கிறார்கள். எனவே, அவர்கள் செல்வத்திலும் கல்வியிலும் சிறந்து, சக்தியுடனும் சுதந்திரத்துடனும் வாழ்கிறார்கள். அன்னையின் திருவடிவங்களான நம் பெண்மக்களைச் சரியாக நடத்தாததே நாம் க்ஷீணித்துப் போனதற்கு முக்கியமான காரணமாகும். "பெண்கள் கண்ணியத்துடன் எங்கு நடத் தப்படுகிறார்களோ, அங்கே தேவர்கள் திருப்தியடைகிறார் கள். எங்கு அவர்கள் அவ்விதம் நடத்தப்படுவதில்லையோ, அங்கு எம்முயற்சியும் பலிக்காது'' என்று மனுதர்ம சாஸ்தி ரம் கூறுகின்றது. பெண்களைத் துயரத்தில் வைத்திருக்கும் குடும்பமோ தேசமோ என்றும் மேன்மை அடையாது.

கல்வியே அருமருந்து

பெண்கள் சம்பந்தமாய்ப் பல முக்கியமான பிரச்சினை களிருக்கின்றன. ஆனால், கல்வியென்னும் அருமருந்தால் ஆற்ற முடியாதது அவற்றில் எதுவும் இல்லை. மனு என்ன சொல்லியிருக்கிறார்? "ஆண்களுக்கு எவ்வளவு சிரத்தையுடன் கல்வி புகட்டப் படுகிறதோ, அவ்வளவு சிரத்தையுடன் பெண்களுக்கும் கல்வி புகட்டப்பட வேண்டும். பிள்ளைகள் முப்பதாண்டு பிரமசரிய வாழ்க்கை நடத்திய பிறகே, அவர்களுக்குப் பெற்றோர் மணம் முடிக்க வேண்டும். அவ்விதமே பெண்களுக்கும் செய்ய வேண்டும். அதுவரை அவர்களுக்குக் கல்வியளிக்கப்பட வேண்டும்.'' ஆனால், நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம்? கொஞ்சமும் தன்னம்பிக்கையில்லாமல், பிறரை நம்பியே வாழ்க்கையை நடத்தும் முறையில் அவர்களை நாம் பழக்கி யிருக்கிறோம். இது காரணமாக, ஒரு சிறு அபாயம் அல்லது ஆபத்து நேர்ந்தபோதிலும், அழுவதைத் தவிர வேறு ஒன்றும் அறி யாதவர்களாக அவர்கள் இருக்கின்றனர். பெண்கள், தங் கள் பிரச்சினைகளைத் தாங்களே தீர்த்துக் கொள்ளும்படி

யான நிலைமைக்கு நாம் அவர்களைக் கொண்டுவரவேண்டும். நம் இந்திய சகோதரிகள் மற்றெந்த நாட்டுப் பெண்களைக் காட்டிலும், ஆற்றல் குறைந்தவாகள் அல்லர்.

பெண்களுக்குரிய கல்வி, சமய உணர்ச்சியைப் பிரதான மாகக் கொண்டு பரப்பப்பட வேண்டும். மற்றப் பயிற்சிகள் அனைத்தும் சமயப் பயிற்சிக்கு அடங்கியவையாயிருக்க வேண்டும். ஆன்மீக உணர்ச்சி, ஒழுக்கம், பிரமசரியம் என்ற இவற்றைக் கவனிக்க வேண்டும். கற்பென்பது ஹிந்து மாதரின் பரம் பரைச் செல்வமாகும். ஆதலால் அவர்கள் அதை நன்ருக அறிவார்கள். முதலில் இந்த இலட்சியத்தை அவர்களிடையே உறுதிப் படுத்துங்கள்! இதன் மூலம் அவர்கள் சிறந்த மன வலிமை பெறுவார்கள். அவர்கள் இல்லறம் புகினும், பிரமசாரியாக வாழ விரும்பினும்—எந்த நிலையிலிருப்பினும் தங்கள் ஒழுக்கத்தை விட்டுத் தவறுவதை விட உயிரை விடத்தக்க அஞ்சாத் தன்மையையும் திட சித்தத்தையும் அவர்களுக்கு இந்த இலட்சியம் அளிக்கும்.

இந்திய மாதர்கள் சீதையின் அடிச்சுவடுகளைப் பின் பற்றி வளர வேண்டும். சீதை ஒப்பற்றவள். அவளே

**சீதையே இலட்சியம்**

இந்திய மாதரின் இலட்சியமாவாள். இந்தியாவில் தோன்றி இருக்கும் உயர்ந்த பெண்மணிகள் அனைவரும் அவள் அடிச்சுவடுகளைப் பின்பற்றியவர்களே. அவள் தோன்றி இப்பொழுது ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு மேலாகி விட்டது. எனினும் அவளை வழிபடாத இந்திய மகனோ, மகளோ கிடையாது. இந்தசீதாப்பிராட்டி, கற்பின் அவதாரமாகிய அவள், பொறுமைக் கடலாயிருந்து சகல துக்கங்களையும் பொறுத்த அவள், எக்காலத்தும் நமக்கு உதாரணமாயிருப்பாள். அவச் சொல்லொன்று மின்றி அள வற்ற துன்பத்தை பொறுத்த அவள்—அந்தக் கற்புக்கரசி

எப்பொழுதும் நம் தேசிய இலட்சியமாய் இருப்பாள். அவளுடைய உணர்ச்சியும் இலட்சியமும் நம் இரத்தத்துடன் இரத்தமாய்க் கலந்து இருக்கின்றன. தற்காலத்தில் நம் பெண்கள் சீதை காட்டிய வழியினின்றும் பிறழ முயன்ருல், அம் முயற்சி வீணுவது நிச்சயம்.

நமது நாட்டின் தற்காலத் தேவைகளை அனுசரித்துப் பெண் மக்களில் சிலரும் துறவு இலட்சியங்களை மேற்கொள்ளல் அவசியமெனத்தோன்றுகிறது.

**சிலர் துறவிகளாதல் அவசியம்**

அனுதி காலமாகத் தங்கள் இரத்தத்தில் தோன்றியிருக்கும் பதி விரதா தருமத்தின் பலத்தினுல், அவர்கள் வலிமை பெற்றுத் தங்கள் வாழ் நாள் முழுவதும் கன்னிகைகளாகவே இருந்து தொண்டாற்ற அவர்களில் சிலராவது விரதங் கொள்ள வேண்டும் தன் புத்திரிகள் சிலராவது இத்தகைய பரிசுத்தமான துறவு மார்க்கத்தை மேற் கொள்ள வேண்டுமெனப் பாரதத்தாய் விரும்புகிருள். இவர்களில் ஒருவர் ஞான சித்தி பெற்ருலும், இவ்வொருவர் மூலம் ஆயிரக்கணக்கான பெண்கள் மனத்தில் ஞானச்சுடர் விளக்கு ஏற்றப்பட்டு, அதனுல் தேசத்திற்குப் பெரும் பயன் உண்டாகும்.

ஒழுக்கமும் கல்வியும் வாய்ந்த கன்னிகைகள் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கும் கடமையை மேற்கொள்ள வேண்டும். கிராமங்கள் தோறும், நகரங்கள்தோறும் பெண்களைப் பயிற்றுவிப்பதற்கெனப்பாடசாலைகள் ஏற்படுத்த வேண்டும். இத்தகைய பக்தியும் கல்வியும் வாய்ந்த ஊழியர்களால்தான் பெண்களிடையே கல்வியைப் பரப்புவது சாத்தியமாகும். தேச சரித்திரம், புராண இதிகாசங்கள், குடும்ப நிர்வாக முறைகள், பல விதமான கலைகள், குடும்பத்தின்பால் நமக்குள்ள கடமைகள், ஒழுக்கத்துக் கேற்ற கொள்கைகள்—இவை அவர்களுக்குக் கற்பிக்கப்பட வேண்டும். பேணல்

முதலியனவும் சொல்லித் தருதல் வேண்டும். தெய்வ ஆராதனை, ஜபம், தியானம் முதலியன அவர்கள் கல்வி முறையில் முக்கியமான அம்சங்களாக இருக்க வேண்டும். இவற்றுடன், வீர உணர்ச்சியையும் அவர்களிடம் வளர்ப்பது அவசியம். பிறர் வந்து துன்புறுத்தினால் அவர்களை எதிர்த்துப் போராடத் தக்க வன்மையையும் அவர்கள் பெற வேண்டும்.

**தற்காத்தல்**

ஜான்சி ராணி தன் சேனைக்குத் தலைமை தாங்கி வீரத்துடன் போர் புரியவில்லையா? சங்க மித்ரா, லீலா, அகல்யாபாய், மீராபாய் போன்ற வீரத் தாய்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்றித் தற்காலத்திலும் வீரமும் சக்தியும் வாய்ந்த பெண்மணிகள் இந்நாட்டில் தோன்ற வேண்டும். அவர்கள் வீரத்திற்கு அடிப்படையாகத் தூய்மையும் தெய்வ பக்தியும் அவர்கள் பால் திகழ வேண்டும். குழந்தைகளை நன்றாகப் பேணக் கூடிய சக்தியும் அவர்களுக்கு இன்றியமையாதது. இத்தகைய தாய்மார்கள் வயிற்றில் பிறக்கும் மக்கள் எதற்கும் அஞ்சாத வீரர்களாகவும், மற்ற விதங்களில் சிறந்தவர்களாகவும் இருப்பார்கள் எனச் சொல்லவும் வேண்டுமா?

பெண்கள் உயர்வு பெற வேண்டும். அவர்கள் மூலம் தான் நம் வருங்கால மக்கள் உயர்ந்த கருத்துக்களைப்பெற்று உயர்ந்த காரியங்களைச் செய்ய முடியும். நமது நாடு சிறப்பெய்துதற்கான வழி இதுவே. இவர்கள் மூலமாகவே நம் நாட்டில் கல்வி, ஞானம், பக்தி, நாகரிகம் சிறப்புற்று வளர்கிறது.

## 8. அனைவருக்கும் கல்வி

**தேசீயப் பெரும் பாவம்**

நம் ஏழைகளின் நிலைமையை நினைத்தால் என் மனம் வெதும்புகிறது. அவர்கள் ஒவ்வொரு தினமும் கீழ்ச்சென்ற வண்ணமிருக்கிருர்கள். கொடூரமான ஒரு சமுதாயம் அவர்கள் மீது அடிமேல் அடியைச் சொரிந்து கொண்டேயிருக்கிறது. அவ்வடிகளை அவர்கள் உணருகிருர்கள். ஆனுல் அவ்வடிகள் எங்கிருந்து வருபவை என்று அவர்களுக்குத் தெரிவதில்லை. தாங்களும் மனிதர்களே என்பதையும் அவர்கள் மறந்து விட்டார்கள். இவற்றை நினைத்தால் என் மனத்தில் உணர்ச்சி பொங்குகிறது. இவற்றைப் பற்றிப் பேசவும் எனக்கு நா எழவில்லை. கோடிக் கணக்கான மக்கள் இங்ஙனம் வறுமையிலும் அறியாமையிலும் ஆழ்ந்திருக்கும் போது, அவர்கள் உழைப்பால் வாழ்ந்துங் கூட, அவர்களை கவனியாதிருக்கும் ஒவ்வொருவனையும் நான் துரோகியென மதிக்கிறேன். பாமர மக்களை அசட்டை செய்ததே நமது தேசீயப் பெரும்பாவமென்று நான் கருதுகிறேன். நமது வீழ்ச்சிக்கு அது முக்கியமான காரணமாகும். இந்திய மக்கள் அனைவரும் கல்வி பெற்றவர்களாய்ப் பசிப்பிணி யற்றவர்களாகும்வரை, அரசியல் துறையில் நாம் எவ்வளவு ஈடுபட்டாலும் அது பயனற்றதாகும்.

**வேண்டியது பொதுமக்கள் கல்வியே**

ஒரு நாட்டின் முன்னேற்றம், அதன் மக்கள் பெற்றிருக்கும் கல்வி, அறிவு அபிவிருத்தியைப் பொறுத்தது. தேசத்திலிருக்கும் கல்வி, அறிவு அனைத்தும் ஒரு சிறுபான்மையோர் வசம் அகப்பட்டது தான் இந்தியாவின் வீழ்ச்சிக்குப் பிரதான காரணம். நாம் மறுபடியும் புத்துயிர் பெற்றெழ வேண்டுமானுல், கல்வியை அனைவரிடத்திலும் பரப்புவதன் மூலந்தான் அது சாத்தியமாகும்.

பொதுமக்கள் தங்கள் உயர்ந்த தன்மையை இப்பொழுது மறந்துவிட்டனர். அவர்களுக்குக் கல்வி கொடுத்து, அவர்கள் உயர்ந்த தன்மையை உணரச் செய்வதே நாம் இப்பொழுது செய்யத்தக்க சேவை. உலகத்தின் பல பாகங்களிலும் நடை பெறும் பேரியக்கங்களைப் பற்றி அவர்கள் அறியச் செய்ய வேண்டும். இவ்விதம் அறிவைக் கொடுத்தால், தங்கள் வாழ்க்கைகளைத் திருத்தி அமைத்துக் கொள்ளும் ஆற்றலை அவர்கள் தாங்களே பெறுவார்கள். ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு தேசமும் தன் தன் வாழ்க்கையின் அமைப்பைத் தானே தான் முடிவு செய்து கொள்ள வேண்டும். நாம் அவர்களுக்குக் கொடுக்கவேண்டியது உயர்ந்த கருத்துக்கள் தான். அவர்கள் வேண்டுவதும் அதுவே. அதற்கு மேல் அவர்கள் முன்னேற்றம் தானே நேரும். இயற்கை ரசாயனப் பொருள்களை ஒன்றுசேர்த்து வைத்தால், இயற்கை விதிப்படி அவை தாமாகவே மாறும். அங்ஙனமே மக்கள் முன்னேற்றத்திற்குரிய சாதனங்கள் அனைத்தையும் ஏற்படுத்தினால், அவர்கள் முன்னேற்றமும் இயற்கை விதிப்படி தானே நிகழும்.

**அனைவருக்கும் ஆன்மிகஞானம்**

ஆன்மிக வாழ்க்கைக்கு அவசியமான ஞானத்தைப் புகட்டும் மணிமொழிகள் பல நம் சமய நூல்களில் நிறைந்திருக்கின்றன. இப்பொழுது அவை சாதாரண மக்கள் கைகளுக்கு எட்டாத இடங்களில் சிலர் வசப்பட்டு இருக்கின்றன. இஞ்ஞானமணிகள் முதலில் எல்லோருக்கும் பயன்படுமாறு செய்யப்பட வேண்டும். சாதாரண மக்கள் அறியவொண்ணாத பல ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன் எழுதப்பட்ட சம்ஸ்கிருத பாஷையில் இவை புதைந்திருக்கின்றன. இவ்வரிய கருத்துக்கள் எல்லோருக்கும் கிட்டும்படி செய்ய வேண்டும். சம்ஸ்கிருதம் தெரியினும், தெரியாதிருப்பினும், இவை இந்தியாவில் பிறந்த ஒவ்வொரு மகன்

அல்லது மகளுடைய சொந்த உடமையாக வேண்டும். இவை சம்ஸ்கிருத பாஷையிலிருப்பது இவற்றை பரப்புவதில் பெருங் கஷ்டமாக இருக்கிறது. நான் என் ஆயுள் முழுவதும் இந்தப் பாஷையைப் பயின்று கொண்டிருக்கிறேன். எனினும், எனக்கே ஒவ்வொரு புத்தகமும் புதிதாகத் தோன்றுகிற தென்றால், சாதாரண மக்கள் இதைப் பயிலுவது எவ்வளவு சிரமமாயிருக்கும்! எனவே, அவ்வெண்ணங்கள் பொது மக்களுடைய சொந்த மொழிகளில் மொழி பெயர்க்கப்பட வேண்டும்.

தாய் மொழியில் புகட்டுக

அவரவர்களுடைய சொந்தத்தாய்மொழியில் இவற்றைப் புகட்டுங்கள்! அவர்களுக்கு இவ்வெண்ணங்களைக் கொடுங்கள்! இதன்மூலம் அவர்கள் விஷயங்களையறிந்து கொள்வார்கள். ஆனால் விஷய ஞானம் மாத்திரம் போதாது. அறிவு, அன்பு, பரஸ்பர விசுவாசம் முதலிய உயர்ந்த குணங்களையும் அவர்களுக்கு அளியுங்கள்! இவ்வருங் குணங்களின்றி மக்களுடைய அறிவும் உயர்வும் சாசுவதமானவையாக இருக்கமுடியாது.

சமஸ்கிருதப் பயிற்சி

இதனோடு சம்ஸ்கிருத பாஷையும் பயில வேண்டும். சம்ஸ்கிருத ஸ்லோகங்களின் தொனியிலேயே ஒரு கண்ணியமும் சக்தியும் இருக்கின்றன. புத்த பகவான்கூட இவ் விஷயத்தில் ஒரு தவறு செய்தார். சாதாரண மக்கள் சம்ஸ்கிருதம் பயிலும்படி அவர் செய்ய வில்லை. அவர், உயர்ந்த கருத்துக்களை அக் காலத்து மொழியாகிய பாலியில் பரப்பினார். அது மகத்தான காரியம். அதன் மூலம் பெரும் பயன் உண்டாயிற்று. அக்காலத்து மக்களின் சொந்த மொழியில் அவர் உபதேசம் செய்த காரணத்தால் அவர் அருள் மொழிகள் நாடெங்கும் பரவின. ஆனால், அதனோடு மக்கள் சம்ஸ்கிருதமும் பயின்றிருக்க வேண்டும். சம்ஸ்

கிருதம், அதைப் பயின்றவர்களுக்கு ஒரு தனி மரியாதை அளிக்கிறது. சம்ஸ்கிருதத்தைப் பொதுமக்கள் பயிலாத வரை, ஒரு சிலர் மாத்திரம் அதைப் பயின்று உயர்ந்த ஜாதி என்று விளக்க இடமிருக்கிறது.

**தேசம் குடிசைகளில்**

நமது தேசம் குடிசைகளில் வசிக்கிறதென்பதை நீங்கள் நினைவூட்டிக் கொள்வீர்களாக! ஊர்ஊராக, கிராமம் கிராம மாகச் சென்று, மக்கள் முயற்சியின்றிச் சோம்பி இருப்பது இனிமேல் கொஞ்சமும் தகாது என்று அவர்களுக்கு எடுத்துரைப்பது உங்கள் கடமையாகும். நம் தற்கால நிலைமையை அவர்கள் உணர வையுங்கள். "சகோதரர் களே! இன்னும் எவ்வளவு காலம் உறங்குவது! எழுங்கள்! விழியுங்கள்!" என்று பரிவுடன் சொல்லி அவர்களைத் தட்டி எழுப்புங்கள்; அவர்கள் நிலையை எங்ஙனம் அபிவிருத்தி செய்து கொள்ள முடியுமென எடுத்துரையுங்கள்; நம் சாஸ் திரங்களிலிருக்கும் உயர்ந்த உண்மைகளை எளிமையுடன் சொல்லி, அவர்கள் கிரகிக்கும்படி செய்யுங்கள்; பிராமணர் களைப்போல அவர்களுக்கும் ஆன்மிக வாழ்வு நடத்த உரிமை உண்டு என்பதை அவர்கள் மனத்தில் ஆழ்ந்து பதிய வையுங்கள்; மிகத் தாழ்த்தவர்களெனக் கருதப்படுகிறவர் களுக்கும் சர்வ சக்தி வாய்ந்த உயர்ந்த மந்திரங்களை உப தேசம் செய்யுங்கள். அதனோடு வாழ்க்கையின் அவசியங் களைப் பற்றியும், வியாபாரம், விவசாயம் முதலிய தொழில் முறைகளைப் பற்றியும் அவர்களுக்குப் போதியுங்கள்!

நூற்றுக் கணக்கான வருஷங்களாக அரசர்கள் அன்னி யர்கள் முதலியவர்களுடைய கொடுமையினாலும், ஜாதிக் கொடுமையினாலும் நம் மக்களின் பலம் மிகவும் குன்றி விட்டது. மீண்டும் அவர்கள் புத்துயிரும் சக்தியும் பெறுதற் குரிய உபாயம், உபநிடதங்கள் கூறும் உயர்ந்த உண்மை களை அறிந்து, 'தான் என்று மழியாத சர்வ வல்லமையுள்ள ஆன்மா' என்று ஒவ்வொருவரும் நம்புவதே யாகும். 'கத்தி

என்னை வெட்டாது, நெருப்பு எரிக்காது, காற்று உலர்த்தாது; நான் சர்வ வல்லமையுள்ளவன், 'சர்வஞ்ஞன்' என்ற இந்த எண்ணங்களில் அவர்கள் உறுதிகொள்ள வேண்டும்.
இவ்வுயர்ந்த கருத்துக்கள் இப்பொழுது
தினசரி வாழ்க் அடைத்து வைக்கப்பட்டிருக்கும் குகை
கையில் ஆன்மீக களிலிருந்தும் காடுகளிலிருந்தும் வெளிப்
உணர்ச்சி போந்து, பொது மக்கள் மனத்தில் குடி
கொண்டு, தினசரி வாழ்க்கையில் பின்
பற்றப் பெறுதல் வேண்டும். இவ்வெண்ணங்கள் கோர்ட்டுகளிலும், கோயில்களிலும் ஏழை மக்கள் வசிக்கும் குடிசைகளிலும், மீன் பிடிக்கும் செம்படவர் இடங்களிலும், பள்ளிக்கூடங்களிலும்-எல்லா இல்லங்களிலும் நுழைந்து வேலை செய்ய வேண்டும். இந்தச் சீரிய நினைவுகள் ஆண் பெண் குழந்தை முதலிய அனைவரையும் முன்னேறும்படி அறைகூவி அழைக்கின்றன. செம்படவர் முதலியோர் எவ்விதம் இக்கருத்துக்களை மேற்கொண்டொழுக முடியுமென நீங்கள் கேட்கலாம். இதற்கு வழி முன்னமேயே காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஒரு செம்படவன் தான் உடம்பன்று, ஆன்மாவென்று நினைப்பதன் மூலம் தன் தொழிலில் அவன் இன்னும் அதிகத் திறமையுடையவனுவான். அவ்விதமே, பள்ளிப் பிள்ளைகள் தாங்கள் ஆன்மாவென்று நினைப்பதன் மூலம், இன்னும் அதிக ஆற்றலைப் பெறுவார்கள்.

இந்தியாவிலுள்ள எல்லாக் கெடுதல்களுக்கும் அடிப்படையாயிருப்பது நம் மக்களின் வறுமையே யாகும். ஒரு
கிராமத்தில் ஓர் இலவசப் பள்ளிக்கூடம்
பள்ளிகள் ஏழை வைக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளு
களிடம் செல்ல வோம். அஃது இலவசமாக இருந்தாலும்
வேண்டும் யாதொரு நன்மையும் செய்யாமல்
போகலாம். ஏனெனில், வறுமையின்
காரணமாக, படிப்பதைவிடக் கொஞ்சம் உழைத்துத் தாய்

தந்தையருக்கு உதவப் பிள்ளைகள், விரும்புவார்கள். 'மலை முகம்மதுவிடம் செல்லாவிட்டால், முகம்மதுதான் மலையிடம் செல்லவேண்டும்' என்ற பழமொழி ஒன்றுண்டு. அதைப் போல அவ்வேழைப் பிள்ளைகள் பள்ளிகளுக்குப் போகாவிட்டால், பள்ளிகள்தான் அவர்களிடம் செல்ல வேண்டும். சேவையை இலட்சியமாகக் கொண்ட ஆயிரக்கணக்கான சாதுக்கள் நம் நாட்டில் கிராமம் கிராமமாய்ச் சென்று சமய போதனை செய்துகொண்டிருக்கிறார்கள். இலெளகிக விஷயங்களைப் பற்றியும் சொல்லிக் கொடுக்க அவர்களை ஏற்பாடு செய்ய முடியுமானால், அவர்கள் கிராமந்தோறும் வீடு வீடாகச் சென்று சமய போதனையுடன் இலெளகிகக் கல்வியும் கொடுத்துக் கொண்டு செல்வார்கள். இப்படி இருண்டுபோன ஒரு காமிரா (போட்டோப் பிடிக்கும் கருவி), ஓர் உலகப்படம் முதலியவற்றுடன் மாலைகளில் கிராமங்களுக்குச் செல்வார்களானால், வான நூல், பூகோளம் முதலியவற்றைக் கிராம மக்களுக்கு எளிதாகச் சொல்லித் தரமுடியும். பல தேசங்களைப் பற்றிக் கதைகள் சொல்லலாம். அவர்கள் தங்கள் வாழ்க்கை முழுதும் படிக்கக் கூடிய விஷயங்களைக் காட்டிலும் அதிகமாகக் கேள்வி மூலம் புகட்டலாம். புதிய விஞ்ஞான சாஸ்திரத்தின் மூலம் அவர்கள் மனத்திலே கல்வியில் ஆர்வத்தை ஊட்டுங்கள். சரித்திரம், பூமி வர்ணனை, விஞ்ஞானம் இலக்கியம் ஆகியவற்றில் கல்வியளியுங்கள். இவற்றுடன் சேர்ந்து சமய நீதிகளையும் அவர்களுக்கு அறிவுறுத்த வேண்டும்.

ஜீவனோபாயம் தேடும் முயற்சியிலேயே நம் ஏழை மக்களின் காலம் முழுதும் கழிந்து விட்டது. கல்வி யறிவுகளில் மனத்தைச் செலுத்த அவர்களுக்கு இதுவரை அவகாசம் கிடைக்கவில்லை. அவர்கள் அறிவற்ற யந்திரங்கள் போல வேலை செய்து வந்திருக்கின்றனர். ஆனால் இப்பொழுது காலம் மாறிவிட்டது. மேல் வகுப்பார் பாமர ஜனங்களை

இனிமேல் அடக்கி ஆள முடியாது. தங்கள் க்ஷேமத்தில் அக்கரையுள்ளவர்களாயிருந்தால், தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்குரிய உரிமைகளை உயர்ந்த ஜாதியார் உடனே அளிக்க வேண்டும். ஆதலால் மேல் வகுப்பினராகிய உங்களுக்குச் சொல்லுகிறேன்: பாமர மக்களிடம் கல்வி பரப்பும் சேவையை நீங்கள் மேற்கொள்ளுங்கள்! 'நீங்கள் எங்கள் சகோதரர்கள். எங்கள் உடம்பில் ஒரு பகுதியாயிருப்பவர்கள்' என்று சொல்லி அவ்வொற்றுமை யுணர்ச்சி அவர்கள் மனத்தில் பதியும்படி செய்யுங்கள். இவ்விதம் அவர்களை அன்புடன் நடத்தினால், அவர்கள் இதன் மூலம் பேருக்கம் எய்திப் பன்மடங்கு சக்தியுடன் முன்னேற்றமடைவார்கள்.

ஏதேனும் பெரிய காரிய மொன்றை நிறைவேற்ற வேண்டுமானால் அதற்கு மூன்று விஷயங்கள் மிகவும் அவசியமானவை. முதன்முதல், இதய பூர்வமான உணர்ச்சி வேண்டும். விவேகத்தினாலும், புத்திசாலித்தனத்தினாலும் ஆவதென்ன? அவை சிறிது தூரம் சென்று, அங்கே நின்று விடுகின்றன. அருள் சுரப்பது, ஆர்வ
செயற்கரிய முண்டாவது இதயத்தின் மூலந்தான்;
செய்யவேண்டு முடித்தற்கரிய காரியங்களை முடிக்க
வன: உணர்ச்சி வல்லது அன்புதான். பிரபஞ்சத்திலுள்ள இரகசியங்களை யெல்லாம் அறிவதற்கு வாயிலாயிருப்பதும் இவ்வன்புதான். தேசாபிமானிகளாக இருக்க விரும்பும் நண்பர்களே! இத்தகைய உணர்ச்சியை நீங்கள் முதலில் பெறுங்கள். உங்களிடம் உண்மையில் இவ்வுணர்ச்சி யிருக்கின்றதா? தேவர்கள் ரிஷிகளுடைய சந்ததியாரான கோடானுகோடி ஜனங்கள் இன்று மிருகங்களுக்குச் சமதையாக, அவற்றின் சகோதரர் போன்ற நிலைக்கு வந்து விட்டனரே என்ற உணர்ச்சி உங்களுக்கு இருக்கிறதா? இலட்சக் கணக்கான ஜனங்கள் இன்றைய

தினம் உணவின்றிப் பட்டினியாகக் கிடக்கின்றார்களே! இலட்சக் கணக்கான ஜனங்கள் பல நூற்றாண்டுகளாய் இப் பட்டினியில் மடிந்து வருகின்றார்களே என்ற உணர்ச்சி உங்களுக்கு இருக்கிறதா? அஞ்ஞானமானது இருண்ட மேகம் போல் சூழ்ந்து நாட்டைக் கவிந்துகொண்டு விட்டதே என்பதை நீங்கள் உணருகிறீர்களா? அவ் வுணர்ச்சி உங்களை அமைதியற்றவர்களாக்கி விட்டதா. உங்களை நித்திரையற்றவர்களாகச் செய்கின்றதா? அஃது உங்கள் இரத்தத்துக்குள் பிரவேசித்து இரத்தக் குழாய்களின் வழியே சுற்றி, உங்கள் இதயத்துடன் சேர்ந்து ஓயாமல் துடித்துக் கொண்டிருக்கிறதா? அஃது உங்களை அநேகமாய்ப் பித்தர்களாக்கி விட்டதா? நாட்டின் துக்கம், சீர்கேடு என்ற ஒரே கவலை உங்களைப் பிடித்துக் கொண்டு விட்டதா? அதனால் உங்கள் பெயர், புகழ் பெண்டு பிள்ளைகள், சொத்து சுதந்திரங்கள் எல்லாவற்றையும் மறந்தீர்களா? உங்கள் தேசத்தையும் கூட மறந்து விட்டீர்களா? இந்த நிலைக்கு வந்து விட்டீர்களானால் அதுவே தேசாபிமானி யாவதற்கு முதற் படியாகும்.

இவ்வுணர்ச்சி உங்களிடம் இருப்பதாகவே வைத்துக் கொண்டாலும், வெறும் வசை மொழிகளிலும் உபயோகமற்ற பேச்சுகளிலுமே உங்கள் சக்தியையெல்லாம் செல விடாது, ஏதாவது காரியத்திற் கொணரும் வழியொன்றைக் கண்டுபிடித்தீர்களா? வீணான தூஷணைகளை விட்டு விட்டு,
ஜனங்கள் படுந் துன்பங்களைச் சிறி
வழி காணல் தேனும் தணிக்க உபயோகமான காரியம்
ஏதேனும் செய்யவும், நடைப் பிணங்களாக்கிக் கிடக்கும் அவர்களை அக்கேவல நிலையிலிருந்து விடுவிக்கவும் ஏதாவதொரு மார்க்கத்தைக்கண்டு பிடித்தீர்களா? இவற்றைச் செய்தால் மாத்திரம் போதாது உங்கள் காரியத்தில் இடையூறுகள் மலைபோலத் திரண்டுவரினும்

அவற்றைத் தயங்காது எதிர்த்துப் போக்கும் திடமான மனே சங்கற்பம் உங்களிடம் இருக்கிறதா?

திட சங்கற்பம் முழு உலகமும் சேர்ந்து கையிற் கத்தி கொண்டு எதிர்த்து நின்ருலும், நீங்கள் சரியென்று நினைக்கும் காரியத்தைச் சற்றும் பின்வாங்காது செய்யவல்ல தைரியம் உங்களிடம் இருக்கிறதா? உங்கள் பெண்டு பிள்ளைகளே உங்களுக்கு விரோதமாக நிற்பினும், உங்கள் பணமெல்லாம் இழக்க நேரிடினும், அதனல் உங்கள் பெயரே கெடுவதானலும், மற்றெல்லாச் செல்வங்களும் போய்விடுவதாக இருந்தாலும் கூட, அப்பொழுதும் எடுத்த காரியத்தை விடாமல் உறுதியாக நிற்பீர்களா? சகலமும் துறக்க நேரிடும் அக்காலத்திலும், நீங்கள் கருதிய உங்கள் இலட்சியம் கை கூடும்வரை, இடைவிடாமல் உறுதியாக மேல் நோக்கிச் செல்வீர்களா? பர்த்ருஹரியார் சொல்வது போல் 'ஞானிகளானேர் நிந்திப்பதானலும் நிந்திக்கட்டும் அல்லது புகழ்வதானலும் புகழட்டும்; சகலபாக்கியங்களையும் கொடுக்கும் இலட்சுமி வந்தாலும் வரட்டும்; அல்லது தனக்கிஷ்டமான இடத்துக்குப் போனலும் போகட்டும்; மரணமானது இன்றே வந்தாலும் சரி; அல்லது நூறு வருஷங்கள் கழித்து வந்தாலும் சரி; எவனெருவன் உண்மையினின்றும் மயிரிழையேனும் பிறழாதிருப்பானே அவனே உறுதியுடையோனவான்' —இவ்வுறுதி உங்களிடம் இருக்கின்றதா? இந்த மூன்று விஷயங்களும்... உண்மையுணர்ச்சி, தக்க வழியொன்று காணல், கண்ட அவ்வழியில் உறுதியுடன் உழைத்தல்—உங்களிடம் இருக்குமானல், நீங்கள் ஒவ்வொருவரும் அற்புதங்களைச் செய்வீர்கள்.

கருணைப் பரஞ்சுடர் நமக்கு வழி காட்டட்டும் என்று நாம் பிரார்த்திப்போமாக! அப்போது, நம்மைச் சுற்றியிருக்கும் அந்தகாரத்தினூடே ஓர் அருள் ஒளி தென்படும்.

நமக்கு வழி காட்ட ஒரு திருக்கரம் வெளித்தோன்றும். வறுமையினாலும், வைதிகத்தின் கொடுமையினாலும் கொடுங்கோன்மையாலும் நசுக்கப்பட்ட நம் தெய்வ வழிபாடு நாட்டிலிருக்கும் இலட்சக் கணக்கான தொண்டே மக்களுக்காக நாம் ஒவ்வொருவரும், இரவும் பகலும் பிரார்த்தனை செய்வோமாக! செல்வரைவிட நான் இவர்களுக்கே மத உபதேசம் செய்ய விரும்புகிறேன். நான் தத்துவ சாஸ்திரியல்லன்! ஞானியுமல்லன்; ஆனால், நான் ஓர் ஏழை; ஏழை மக்களை நேசிக்கிறேன். தரித்திரத்திலும் அறியாமையிலும் ஆழ்ந்திருக்கும் கோடிக்கணக்கான மக்களுக்காக யார் இரங்குகிறார்கள்? யாரொருவர் ஏழைமக்களின் பொருட்டு நெஞ்சு புண்ணாக வருந்துகிறாரோ அவரை ஒரு மகாத்மாவென மதிப்பேன்! ஆனால் அவர்களுக்காக யாரே வருந்துகிறார்கள்! அவர்கள் ஞானத்தையோ கல்வியையோ பெற முடியாது. அவர்களுக்கு வெளிச்சத்தைக் கொண்டுவருவார் யார்? வீடு வீடாகச் சென்று அவர்களுக்குக் கல்வி புகட்ட முற்படுவோர் யார்? இவ்வேழை மக்களையே உங்கள் தெய்வமாகக் கொள்ளுங்கள்; அவர்களைப் பற்றியே சிந்தனை செய்யுங்கள்: அவர்களுக்காகவே உழையுங்கள்; அவர்களுக்காகவே சதா பிரார்த்தனை செய்யுங்கள்! ஈசுவரன் உங்களுக்கு வழி காட்டுவானாக!



# OUR PUBLICATIONS

| | *Name of the book* | *Author* | *Price* |
|---|---|---|---|
| | | | Rs. |
| 1. | Education (English & Tamil) | — *Swami Vivekananda* | 1.50 |
| 2. | Educational Philosophy of Swami Vivekananda | — *T. S. Avinashilingam* | 5.00 |
| 3. | School & the Centenary | — ,, | 3.00 |
| 4. | World Teachers on Education - Edited by | *T S. Avinashilingam* & *K. Swaminathan* | 5.00 |
| 5. | Place of Spiritual values in Education | — *Seminar Report* | 3.75 |
| 6. | Audio-Visual Aids | — *K. Kulandaivel* | 4.50 |
| 7. | Educational Ideals | *Centenary Series-13* | 3.00 |
| 8. | The Seminar on Food Production | | 10.00 |
| 9. | Journal of Educational Research and Extension | —*Annual Subscription* | 10.00 |
| 10. | Education for National Integration | Editor: *T. S. Avinashilingam* | 9.00 |
| 11. | Swami Vivekananda and Indian Renaissance | — *T. M P. Mahadevan* | 7.00 |
| 12. | Sri Ramakrishna-Vivekananda Vedanta and Human Personality | — *C. T. K. Chari* | 3.00 |
| 13. | Concentration–The Only Method of Education | *Memorial Seminar Report No. 4* | 2.50 |
| 14. | A Handbook on Methodology of Research | Ed: *Dr. (Mrs.) Rajammal P. Devadas* | 10.00 |
| 15. | கல்வி (Education) | — மகாத்மா காந்தி | 0.75 |
| 16. | நான் கண்ட மகாத்மா (Gandhiji As I Saw) | தி.சு. அவினாசிலிங்கம் | 4.50 |
| 17. | வித்யாலய பஜனைப் பாடல்கள் | | 1.50 |
| 18. | திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு (விற்பனை: அமுத நிலையம் சென்னை-18) | — கி. வா. ஜகந்நாதன் | 18.00 |
| 19. | இந்திய பெரியோர்கள் | தமிழாக்கம்: தி. சு. அவினாசிலிங்கம் | 0.50 |